# பாரதியின் சமுதாயச் சிந்தனைகள்

முனைவர் க. இளமதி சானகிராமன்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# பாரதியின் சமுதாயச் சிந்தனைகள்

முனைவர் க. இளமதி சானகிராமன்
இணைப் பேராசிரியர்
புதுவைப் பல்கலைக்கழகம்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
இரண்டாம் முதன்மைச் சாலை, மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்,
தரமணி, சென்னை-600 113

பெருந்தலைவர் காமராசர் அறக்கட்டளைச் சொற்பொழிவு
(அறக்கட்டளை நிறுவியோர்-நாடார் மகாசன சங்கம், மதுரை)

வரிசை எண் : 6 நாள் : 21.10.2004

## BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the Book | : | Pāratiyin Camutāyac Cintanaikal |
| Author | : | Dr. K. Ilamathi Janakiraman<br>Associate Professor<br>Pondicherry University, Pondicherry. |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus,<br>Chennai-600 113.<br>Ph: 22542992 |
| General Editor | : | Dr. Annie Thomas<br>Professor<br>Faculty of Sociology Art and Culture<br>International Institute of Tamil Studies. |
| Publication No. | : | 521 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2004 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 10 Point |
| No. of Pages | : | viii + 72 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 25/- (Rupees Twenty Five Only) |
| Printed by | : | Creative Enterprises<br>No.203, Arcot Road<br>Chennai-600 026. |
| Subject | : | Sociology |

முனைவர் சா. கிருட்டினமூர்த்தி
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை-600 113.

## அணிந்துரை

கவிதை என்பது படித்து மகிழ்வதற்கும் உணர்ச்சிப் பெருக்கிற்கு மெருகூட்டுவதாகவும் மட்டும் அமைவது இல்லை. சமுதாய உணர்வுகளையும் வெளிக்கொணர வேண்டும். இந்நிலையில், தான் வாழும் சமூகத்தில் நிகழும் அவலங்கள் பற்றியும், சீர்கேடுகள் பற்றியும் சிந்தித்துப் பார்க்கிறவனே கவிஞனாகக் கருதப்படுவான். அத்தகைய கவிஞனையே நாடு போற்றும்.

இத்தகு அவலங்களையும், சீர்கேடுகளையும் சுவைபட எடுத்துக்கூறுவதால் மட்டும் சமுதாயக் கவிஞன் வெற்றிபெற முடியாது. அவலங்களும் சீர்கேடுகளும், மாற்றப்படுவதற்கும் போக்கப்படுவதற்கும் உரிய தீர்வுகளை எண்ணிப் பார்க்கின்றவனே சிறந்தகவிஞனாகப் போற்றப்படுவான். 20ஆம் நூற்றாண்டின் இணையற்ற மகாகவியாகிய பாரதியார் ஒரு சிறந்த சமுதாயக் கவிஞராக எல்லோராலும் பாராட்டப்படுகிறார். சமுதாய மாற்றத்திற்கான தீர்வுகளைக் கூறுவதில் பாரதியாரின் பங்கு குறிப்பிடத்தக்கதாக அமைகிறது.

பெண்கல்வி, பெண்ணுயர்வு, இளம் வயது திருமணம், சாதியக்கொடுமை, உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்ற பிரச்சினைகளை எதிர்த்து நின்று பாடியவர் பாரதி. பாரதியின் சமுதாயச் சிந்தனைகளைப் பற்றி அறிஞர் பலர் ஆய்ந்து வெளிப்படுத்தி வருகின்றனர்.

அவ்வரிசையில் பாரதியாரின் சமுதாயச் சிந்தனைகள், சாதி மற்றும் சமுதாயச் சிந்தனை, பெண் முன்னேற்றச் சிந்தனை, கல்விச் சிந்தனை, மொழிச் சிந்தனை, தொழில் துறைச் சிந்தனை, குடும்பச் சிந்தனை என்ற பிரிவுகளில் மிக விரிவாக ஆய்வு செய்து ஓர் அறக்கட்டளைச் சொற்பொழிவைப் புதுவைப் பல்கலைக்கழகத் தமிழியல் துறை இணைப் பேராசிரியர் முனைவர் க. இளமதி ஜானகிராமன் உருவாக்கித் தந்துள்ளார். இது பெருந்தலைவர் காமராசர் அறக்கட்டளையின் 6ஆம் சொற்பொழிவாக இந்நிறுவனத்தில் நடைபெறுகின்றது. இச்சொற்பொழிவை ஆய்வு நோக்குடன் உருவாக்கித் தந்துள்ள முனைவர் க. இளமதி ஜானகிராமன் அவர்களை நிறுவனத்தின் சார்பில் பாராட்டுகிறேன்.

இச்சொற்பொழிவு 'பாரதியாரின் சமுதாயச் சிந்தனை' என்ற பெயரில் நூலாக வெளிவருகிறது. பாரதியாரின் பன்முகப்பார்வைகளை ஆய்வு செய்வார்க்கு இந்நூல் ஒரு சிறந்த வழிகாட்டியாக அமையும் என்பதில் ஐயமில்லை.

பாரதி ஆர்வலர்களுக்கும், ஆய்வாளர்களுக்கும் இந்நூல் ஒரு புதுவரவாக அமையும். இவ்வறக்கட்டளைச் சொற்பொழிவுக்குப் பொறுப்பாளராக இருந்து இந்நூல் வெளிவருவதற்கு ஒத்துழைப்பு நல்கிய நிறுவனத்தின் சமூகவியல் மற்றும் கலை பண்பாட்டுப்புலப் பேராசிரியர் முனைவர் அன்னி தாமசு அவர்களின் பணி குறிப்பிடத்தக்கதாகும்.

இந் நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் தந்து வருகின்ற **நிறுவனத் தலைவர் மாண்புமிகு கல்வி மற்றும் வணிகவரித் துறை அமைச்சர் திருமிகு சி.வி. சண்முகம்** அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி-பண்பாடு மற்றும் அறநிலையத்துறைச் செயலாளர் **திருமிகு பு.ஏ. இராமையா இ.ஆ.ப.,** அவர்களுக்கும், சிறப்புச் செயலாளர் **திருமிகு தா. சந்திரசேகரன் இ.ஆ.ப.,** அவர்களுக்கும் என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

இந்நூலுக்கு ஒளி அச்சுக்கோப்புச் செய்த கணிப்பொறி உதவியாளர் திருமதி பி. கௌசல்யாவிற்கும், அழகுற அச்சிட்டுத் தந்த கிரியேட்டிவ் எண்டர் பிரைசஸ் அச்சகத்தார்க்கும் பாராட்டுகள்.

**இயக்குநர்**

சென்னை
*13-10-2004*

## ஆசிரியரைப் பற்றி



**பெயர்:** க. இளமதி சானகிராமன்

**பணி:** இணைப்பேராசிரியர், சுப்பிரமணிய பாரதியார் தமிழியற்புலம், புதுவைப் பல்கலைக்கழகம், புதுச்சேரி-14.

**கல்வித்தகுதி:** முதுகலை (தமிழ்) முதுகலை (இதழியல் & தகவல் தொடர்பியல்) முதுகலை (பொதுநிர்வாகம்) இளங்கலை ஆசிரியப் பயிற்சி (B.Ed.) முனைவர் பட்டம் (சித்தர் இலக்கியம்).

**பட்டய வகுப்பு:** சைவசித்தாந்தம், மகளிரியல் கல்வி - பெண்ணியம்.

**சான்றிதழ்கள்:** தெலுங்கு, மொழியியல்.

**பயிற்றுவிக்கும் வகுப்புகள்:** பக்தி இலக்கியம், சித்தர் இலக்கியம், படைப்பிலக்கியம், காப்பியங்கள், யோகா.

**எழுதியுள்ள நூல்கள்:** 11

**சித்தர் நூல்கள்:**

1. பேரின்பப் பெருவாழ்வு
2. சித்தர்களும் சமூகப்பார்வையும்
3. சித்தர்களின் சிந்தனைகள்
4. சிவவாக்கியர் பாடல்களின் செம்பதிப்பு
5. கொங்கணச் சித்தர் பாடல்கள் தொகுப்பும் திறனாய்வும்.

**வாழ்க்கை வரலாறுகள்:**

6. நல்லாசிரியர் புலவர் கு. கன்னையாவின் வாழ்வும் பணியும்
7. ஓம் சற்குரு அப்பா பைத்தியம் சுவாமிகளின் வாழ்வும் பணியும்

**படைப்பிலக்கியங்கள்:** சிறுகதைத் தொகுப்புகள்

8. நம்மைப்போல
9. மெழுகுவர்த்திகள்
10. எரிமலையாய்...

**பொது:** 11. வள்ளுவ நோக்கு

**ஆய்வுப்பணி:**
இளநிலை ஆய்வாளர் பட்டம் பெற்றவர்கள் : 30
முனைவர் பட்டம் பெற்றவர்கள்- 4, ஆய்வேடு அளித்துள்ளவர்கள்- 4
ஆய்வு செய்து வருபவர்கள்- 5

'சித்தர் இலக்கிய அகராதி' - பல்கலைக்கழக நல்கைக்குழுவின் நிதியுதவியுடன் நடைபெற்று வருகிறது.

**சென்றுவந்த நாடுகள்:** மலேசியா, அமெரிக்கா.

சித்தர் நூல்கள் மற்றும் மெழுகுவர்த்திகள் நூல் பல்கலைக்கழகங்களிலும், கல்லூரிகளிலும் பாடநூல்களாக வைக்கப்பட்டுள்ளன.

# அறிமுகவுரை

இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற கவிஞராகிய பாரதி, முப்பத்து ஒன்பதே வயதுக்குள் ஒரு முழுமையான வாழ்க்கையை வாழ்ந்தவர். நூறு வயது வாழ்ந்தவர்களும் அனுபவிக்க முடியாத பல அற்புதங்களை, அதிசயங்களை, அவமானங்களை, இடர்ப்பாடுகளை, வறுமையை, சாதியச்சாடல்களை, பல்வேறு இடமாற்றங்களை, சமுதாயச் சீர்கேடுகளை அனுபவித்தவர். அந்த அனுபவங்களின் வாயிலாகப் பெற்ற உண்மைகளை இச்சமுதாயத்திற்காக, இம்மக்கள் தெரிந்து கொள்வதற்காக மக்களைத் திருத்துவதற்காக எழுதிச் சென்றவர். பார்ப்பனராகப் பிறந்தது அவர் குற்றமா? இன்றைய நிலையிலும் அவரை முழுமையாகப் புரிந்துகொள்ளாதவர்கள், அவர் எழுத்துக்களைப் படிக்காதவர்கள் பல்வேறு விதமாகத் தூற்றுகின்றனர். ஆனால் பாரதியைப் புரிந்துகொண்டோர். . அந்த அற்புத மனிதனை இனம்கண்டோர் எவ்விதத்திலும் குறைகூறமாட்டார். இனம் கண்டு கொள்ளாமையினால் இகழுகின்ற சிலருக்கு இடம் கொடாது, அவரது கருத்துக்கு மதிப்பளிக்காது விடுதலே பாரதிக்கு நாம் சேர்க்கும் சிறப்பாகும்.

வாழும் காலங்களின் பொருளாதார வசதிகளை மட்டும் தான் பாரதி பெறவில்லையே தவிர தன்னைத்தான் உணரும் மன ஆளுமையை, ஞானிகளின் தரிசனத்தை, சமுதாயத் தேவையை நிறைவு செய்யும் ஆற்றலை முழுமையாகப் பெற்ற வசதிகளையுடையவர். அவர் தனக்காக வாழ்ந்தவரில்லை. இவ்வாழ்க்கை அவருக்குப் பிடித்தமுமில்லை. சக்தி எதனைச் செய்யும்படி தூண்டுகின்றாளோ அதுவே தனது செயல் என்ற தூயவாழ்க்கை வாழ்ந்ததினால் அவரது பார்வைச் சிறகுகள், விரிந்து வானத்தையும், பூமியையும் இணைக்கும் தரத்தவாய், இவ்வுலக மக்களை வாழ்வாங்கு வாழவைக்கும் தன்மையுடையனவாய் அமைந்தன.

அவ்வகையில் இச்சமுதாயம் குறித்த அவர் பார்வையினை வெளிப்படுத்துவதே இப்பொழிவின் நோக்கமாகும். அவரது படைப்புகள் பலராலும் ஆராயப்பெற்று இதுவரையில் பல

ஆய்வுகள் வெளிவந்துள்ளன. "தொட்டனைத் தூறும் மணற்கேணி" போல அவரது படைப்புகளில் இன்னும் இச்சமுதாயம் தெரிந்துகொள்ள வேண்டியவை மிகுதியாக உள. அவற்றிலும் குறிப்பாக அவர் இச்சமுதாயம் எப்படி இருக்க வேண்டும்? எதை நோக்கிச்சென்றால் மேன்மையடையலாம்? என்று விரும்பினாரோ அதனை வெளிப்படுத்துவது இன்றைய இன்றியமையாத் தேவையாகும். அத்தேவை கருதியே இத்தலைப்பு, இவ்வறக்கட்டளைப் பொழிவிற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டது.

பெருந்தலைவர் காமராசர் அவர்கள் பெயரால் அமைந்துள்ள இவ்வறக்கட்டளைச் சொற்பொழிவிற்கு என் பெயரைப் பரிந்துரை செய்த இயக்குநர் சா. கிருட்டினமூர்த்தி அவர்களுக்கும் அறக்கட்டளைப் பொறுப்பாளர் முனைவர் அன்னிதாமசு அவர்களுக்கும் மற்றும் தெரிவுக்குழுவினருக்கும் நிறுவனத்தினருக்கும் நான் நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளேன்.

பாரதியின் சமுதாயக் கருத்துகளை முடிந்தவரையில் தொகுத்து வழங்கி இந்நூலை நிறைவு செய்துள்ளேன். இன்றைய சமுதாயமும் இனிவரும் சமுதாயத்தினரும் பாரதியை நோக்கி நடைபயிலுதலே நன்மையும், வண்மையும் சேர்க்கும். அவர் வழி நடப்போமாக!

# உள்ளே

# முன்னுரை

## பாரதி-காலமும் படைப்பும்

### காலச்சூழல்

மக்களின் தொகுதி சமுதாயம் எனப்பெறும். மக்களின் தேவையை, அவர்தம் செயல்பாடுகளை, பழக்க வழக்கங்களை ஆராய்கின்ற ஆய்வே, சமூகவியல் ஆய்வாகும். முந்தைய காலங்களில் வாழ்ந்த மக்களின் வாழ்வியலை ஆராய்வதற்கு அவர்காலத்து எழுந்த இலக்கியங்கள் பெரிதும் துணை செய்கின்றன. அவற்றின் வழியே சமூகவியல் ஆய்வுகளும் மேற்கொள்ளப்பெறுகின்றன.

சங்ககால இலக்கியங்கள் மக்களின் அகம் மற்றும் புறம் குறித்த செய்திகளை முன்வைக்கின்றன. அகநிலையில் தலைவன், தலைவி, தோழி, மக்களின் வாழ்வியல் சூழல், இவற்றிற்கான சமூகப் பின்புலங்கள் முதலானவற்றையும் புறநிலையில் அரசன், போர் முறைகள், நால்வருணப்பாகுபாட்டுப் பிரிவுகள், அரசனை மையமிட்ட சமூகம் எனுமிவை குறித்தும் விளக்கிச் செல்கின்றன.

சங்கம் மருவியகால இலக்கியங்கள் அறநெறிகளைக் கூறக் காப்பியங்கள் முன்நின்று வாழ்வியலை, நாட்டு வளங்களை அரசு குறித்த செய்திகளை, மக்கள் மேற்கொள்ள வேண்டிய சமூக வாழ்வை, அறநெறிகளை வற்புறுத்துகின்றன. பொதுவாக இவையும் இவற்றிற்குப்பின் வந்த பக்தி இலக்கியங்களும், சமய வாழ்வை மையமிட்டே அமைந்துள்ளன என்பது நோக்கத்தக்கது.

மிகவும் பிற்காலத்தவையாய் இலங்கும் சிற்றிலக்கியங்கள் அரசியலாளுமையையும் பொருளாதாரத்தில் பிற்பட்ட மக்களின் வாழ்வியலையும் தெற்றெனப் புலப்படுத்துவதுடன் காலமாறுபாடுகளையும் இலக்கிய அமைவுமாறுபாடுகளையும் நமக்கு எடுத்தியம்புகின்றன. சமூக மக்களில் அடித்தட்டு மக்களுக்காய்க் குரல் கொடுத்து, அவர்தம் உரிமைகளுக்காய்ப் பாடுபட்ட இவர்களின் இயக்கங்கள் அவர்கள் காலச் சமுதாயச் சீரழிவுகளையும் முழுமையாகப் படம்பிடித்துக் காட்டுகின்றன. சாதிய வேறுபாடுகள், ஆண்டான்-அடிமைநிலை, வறுமை, கல்வியின்மை, பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் முதலான

பலவற்றையும் எடுத்தியம்பி மக்களிடையே ஒரு விழிப்புணர்ச்சியையும் ஊட்ட முயன்றன.

சமயவாதிகள் ஒருபக்கம் தங்களின் சமயங்களைப் பரப்பமுயலத் தாயுமானவர், வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள், வடலூர் இராமலிங்க வள்ளலார் போன்றோர் மக்களுக்கு உண்மையான ஆன்மீகத்தையும், வேறுபாடற்ற சமுதாயத்தையும் முன்வைத்து மக்களை நன்னெறியில் கொண்டு செல்ல முயன்றனர். வெளிநாட்டவர் தங்களின் ஆளுமைத் தன்மையால் கல்வியறிவு பெற்றிருந்த மேல்தட்டுவர்க்கத்தினரை முழுமையாகப் பயன்படுத்திக்கொண்டனர்.

## பாரதியின் வரவு

தங்களது பண்பாட்டை இந்திய மண்ணில் இறக்குமதி செய்தே தீருவது என்ற ஆங்கிலேயரின் எண்ணம் முற்றிலும் நிறைவேற அவர்களால் உருவாக்கப்பெற்ற கல்வித்திட்டம் முழுஅளவில் பயன்தந்தது. இந்நிலையில் தான் பாரதி, சுதந்திரப் போராட்ட வீரர்களுடன் தானும் பங்கேற்றுத் தம்பாடல்களாலும் கட்டுரைகளாலும் மக்களுக்கு விழிப்புணர்ச்சியை ஊட்டுகின்றார்.

சின்னசாமி ஐயரெனும் தம் தந்தையால் திருநெல்வேலியில் உள்ள ஆங்கிலோ வெர்னாகுலர் பள்ளியில் கல்விபயில்வதற்காகச் சேர்க்கப்பெற்ற பாரதி, பொருளாதார வசதி தடைப்பட்டதால் படிப்பைப் பாதியில் விடுகின்றார். தமது கல்வியாற்றலால் எட்டையபுர மன்னனிடத்துப் 'பாரதி' பட்டத்தைப் பெற்ற அவர், சமூக நலன் கருதியே விடுதலைப் போராட்டத்தில் ஈடுபடுகின்றார். 'இந்தியா' மற்றும் சுதேசமித்திரனில் எழுதிய அவரது எழுத்துகளும் அவர்பாடிய கவிதைகளும் மக்களிடையே மிகப் பெரிய மாற்றங்களை ஏற்படுத்தின. சிலருக்கு ஏமாற்றங்களையும் அளித்தன. அந்த ஏமாற்றங்களே அவரைக் குறித்த முழுமையான பார்வையை அவர்கள் பெறத் தடையாயின. அதன் காரணமாய்ப் பாரதியைக் குறித்து வீணான பேச்சுகளை அவர்கள் எழுப்பினாலும் அவையனைத்தும் விழலுக்கிறைத்த நீராயின. எனவே பாரதியின் படைப்புகள் நிலைபெற்று, இன்று எல்லோராலும் போற்றப்பெற்று, ஆய்வுகளும் மேற்கொள்ளப்பெற்று வருகின்றன.

## பாரதியின் படைப்புகள்

பாரதியின் படைப்புகள் அனைத்தும் அவர் கண்ட சமூகத்தையும் அவர்காண விரும்பிய சமூகத்தையும் யதார்த்தமாக, உண்மையாக வெளிப்படுத்துகின்றன. சமூகவியல் ஆய்வுகள் உண்மையாக அமைய வேண்டுமெனில் ஆராய எடுத்துக்

கொள்ளும் இலக்கியப் படைப்புகளும் மெய்ம்மைத் தன்மை கொண்டிருக்க வேண்டும். அப்பொழுதே உண்மையான சமுதாய நிலையை வெளிப்படுத்த இயலும். இதனைப்

> "பொருளாதார அழுத்தத்தின் காரணமாகவும் சமுதாயப் போக்கைப் பொருளாதார ஏற்றத் தாழ்வுகள் தரம்பிரித்ததின் காரணமாகவும் அப்படைப்புகள் சமூகவியல் பார்வையில் மிக ஆழமாக அலசப்பெற்றன. இலக்கியம் சமுதாயத்தின் கண்ணாடியாகவும் மெய்ம்மை வாய்ந்ததாகவும், இருத்தல் வேண்டும் என்றும் எண்ணப்பெற்றது"

என்ற கூற்றின் வழியாகத் தெளியலாம்.

சமீபகாலம் வரை பாரதியின் கவிதைகள் உற்று நோக்கப்பட்ட அளவிற்குப் பாரதியின் உரைநடைகள் கவனப்படுத்தப்படவில்லை. பாரதியை 'மகாகவி', 'தேசியகவி' என்ற அடைமொழிகளோடு வழங்குவதனால் அவரைக் கவிஞன் என்ற தளத்திலேயே வெகுகாலமாக இனம்கண்டு வருகிறோம்.

தமிழ் இலக்கியங்களின் தொடக்ககாலம் முதல் பாரதி யுகத்திற்குச் சற்று முந்தைய காலம் வரை மரபுக் கவிதைகள் இலக்கிய உலகில் கோலோச்சி நின்றிருந்தன. அவற்றின் பாடுபொருள்கள், கடவுளையோ, மன்னனையோ, மக்களில் சிறந்தவரையோ மையமிட்டு அமைந்திருந்தன.

பாரதியின் வருகைக்குப் பிறகுதான் தமிழ்க் கவிதை வரலாற்றில் பாடுபொருளின் மாற்றம் ஏற்பட்டது. அதற்குப் பாரதிகால சமூக, வரலாற்றுப் பின்னணிகளின் பாதிப்பே காரணம்.

பாரதி காலத்திற்கு முன்புவரை ஆளும் வர்க்கத்தை நேரடியாக எதிர்த்து எழுதப்பட்ட இலக்கியப் பதிவுகளைக் காண்பது அரிது. விருப்பத்தோடோ, விருப்பமின்றியோ ஆளும் வர்க்கத்தோடு மக்கள் உடன்பட்டே வாழ்ந்துவந்தனர். புலவர்தம் பாடல்களிலும் துதிபாடும் போக்கே நிலவிவந்தது.

ஆளும் வர்க்கத்திற்கு எதிரான எதிர்ப்புக் குரல் பாரதியின் கவிதைகளிலிருந்துதான் உயிர்த்தெழத் தொடங்கியது. மக்களின் விடுதலை ஒன்றையே பிரதானக் கருத்தாகக் கொண்டு, பாரதியின் கவிதைவீச்சு மக்களிடம் பெரும் வரவேற்பைப் பெற்றது. இன்றுவரை பாரதியின் கவிதைகள் நிலைத்து நிற்பதற்கான காரணமும் இதுதான்.

பாரதி எடுத்துக்கொண்ட பாடுபொருளின் அடிப்படையில் 'இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற கவிஞன்' என்று பாரதியை வர்ணித்தாலும், தொடக்ககாலம் முதல் இன்றுவரையிலான தமிழ்க் கவிதையுலகில் பாரதியின் பங்களிப்பு தனித்துவம் வாய்ந்தது.

இந்தக் காரணங்களால் பாரதியின் கவிதைகள் பிரசித்தம் பெற்றுள்ளன. அவர் வாழ்ந்த காலத்திலும், அவர் மறைவிற்குப் பின்னும் அவருடைய கவிதைகள் பொருள் புரிந்தோ, புரியாமலோ பண்டிதர் முதல் பாமரர் வரை இசையோடு முணு முணுக்கப்பட்டுவந்துள்ளன.

பாடப்புத்தகங்களில் பாரதியின் பாடல்கள் இடம்பெறத் தொடங்கிய காலம் முதல் பண்டிதர்களால் பாடல்களின் கவித்துவம், இலக்கிய நயம் ஆகியவை ரசனை முறையில் எடுத்துக்காட்டப்பட்டு வந்துள்ளன. பாட்டு வகுப்புகளில் கீர்த்தனைப் பாடல்கள் பெற்றிருந்த செல்வாக்கிற்கு இணையாக, பாரதியின் பாடல்களும் செல்வாக்குப் பெற்றிருந்தன;இராக, தாளங்களோடு மேடைகளில் அரங்கேற்றப்பட்டன.

இதனால் பாரதியின் கவிதை ஆளுமை தமிழ்ச் சமூகத்தின் இதயத்தில் பொறிக்கப்பட்டது. ஆனால் பாரதியின் கவிதைகளுக்குச் சற்றும் குறைவில்லாது கவித்துவமும், கருத்துவளமும் நிரம்பிய அவரது கட்டுரைகள் கவனப்படுத்தப்படாமல் இருந்ததற்கான காரணங்கள் ஆய்விற்குரியன.

ஆரம்பக் காலமுதல் பாரதி ஆர்வலர்கள் கூட அவரது கட்டுரைகளை முதன்மைப்படுத்தாமை; மேடைப் பேச்சாளர்கள் உணர்ச்சிபொங்கப் பாரதியின் கவிதைகளை முழங்கிய அளவிற்குக் கட்டுரையில் உள்ள கருத்துகளைப் பற்றிப் பேசாதிருந்தமை, பாடப்புத்தகங்களில் பாரதியின் கவிதைகளுக்கு இடங்கொடுத்த அளவிற்கு அவரது கட்டுரைகளைச் சேர்க்காமை, பாரதி பற்றிய வாழ்க்கைக் குறிப்புகளில் கூடப் பாரதியைக் கட்டுரை ஆசிரியராகக் காட்டாமை போன்றவை பாரதியின் கட்டுரைகள் பரவலாக்கப்படாமைக்கான பொதுவான காரணங்களாகும்.

பாரதியினுடைய பிரபஞ்சம் தழுவிய பார்வையினை உள்வாங்கிக் கொண்டு அவரது படைப்புகளை அணுகும் போதுதான் அவரின் படைப்பாளுமையை முழுவதுமாகப் புரிந்து கொள்ள முடியும். அத்தகைய பார்வையிலிருந்து விலகி அவரது படைப்புகளிலிருந்து தனக்குச் சாதகமானவற்றை எடுத்தும்

பாதகமானதை விடுத்தும் சிலர் செய்கின்ற ஆய்வினால், பாரதியை இந்துத்துவா வாதியாகவும், ஆணாதிக்கச் சிந்தனையாளராகவும் காட்டிப் பாரதியைக் குற்றவாளிக் கூண்டில் நிறுத்துகின்றனர்.

இப்படித் தனித்தனியாகப் பிரித்து ஆராய்வதன் மூலம் வேத நூல்களைக் கூட நாத்திகப் பிரச்சார நூல்களாகக் காட்டிவிடமுடியும் என்பதை எண்ணிப்பார்க்க வேண்டும்.

பாரதியின் படைப்புகள் அனைத்தும் பிரபஞ்ச நன்மை கருதியிருக்கின்றன. மனித நேயம் ஒன்றையே மையப் பொருளாகக் கொண்டிருக்கின்றன. அந்தப் பிரபஞ்ச நன்மையைக் கருத்தில் கொண்டே அவருடைய பார்வைகள் தேசிய அளவிலும், சாதி சமயங்கள் அடிப்படையிலான மனித உறவுகளின் அடிப்படையிலும், மொழி, இன அடிப்படையிலும், பால் நிலையில் ஆண்-பெண் என்ற அடிப்படையிலும் ஊடுருவிப் பார்க்கின்றன.

பாரதி பல பத்திரிகைகளின் ஆசிரியராய் இருந்து வந்தவர். அப்போதெல்லாம் பத்திரிகையின் தேவைக்காக, பக்கத்தை நிரப்புவதற்காகத் தனது எழுத்தாளுமையை வீணாக்கிக் கொள்ளவில்லை. சமகாலப் பிரச்சினைகளை அலசி ஆராய்ந்து, பிரச்சினைகளுக்கான தீர்வுகளை வழங்குவதில் பாரதி தனக்கென ஒரு தனி முத்திரையைப் பதித்துள்ளார்.

பாரதியின் படைப்புகள் வழியாக வெளிப்படும் அவரது சமுதாயப் பார்வையினை இருபெரும் பிரிவுகளாகப் பார்க்கலாம். அவை,

1. **பாரதிகாலச் சமுதாயம்,**
2. **பாரதி காண விரும்பிய சமுதாயம்**

என்பனவாகும்.

இப்பொழிவு பாரதியின் இவ்விருவகைப் பார்வைகளையும் பல்வேறு சிந்தனைகளின் வாயிலாகத் தெளிவாக எடுத்தியம்புகிறது.

இவ்வடிப்படையில் இப்பொழிவின் இயல்களைக் கீழ்க்காணுமாறு பகுக்கலாம்.

**இயல் 1 : சாதி மற்றும் சமயச் சிந்தனைகள்.**

**இயல் 2 : பெண் முன்னேற்றச் சிந்தனைகள்**

**இயல் 3 : கல்வி மற்றும் மொழிச் சிந்தனைகள்**

**இயல் 4 : தொழில்துறைச் சிந்தனைகள்**

**இயல் 5 : குடும்பச் சிந்தனைகள்**

# சாதி மற்றும் சமயச் சிந்தனைகள்

இவ்வியலில், பாரதி கால சாதி மற்றும் சமயப் பாகுபாடுகள், அவற்றால் ஏற்பட்ட சிக்கல்கள் ஆகியவற்றை விளக்கி அவற்றைக் களைந்து ஒன்றிணைந்த இந்தியச் சமுதாயத்தை உருவாக்கப் பாரதி மேற்கொண்ட முயற்சிகள் அவரது படைப்புகள் வாயிலாக ஆராய்ந்து வெளிப்படுத்துகின்றன.

## சாதி, சமயச் சிக்கல்களும் அவற்றிற்கான தீர்வுகளும்

சாதி, சமயப் பிரச்சினைகளைப் பற்றிய பாரதியின் சிந்தனைகளை ஆராயப் புகுமுன், பாரதி ஓர் உயர்சாதி இந்து என்ற நிலையில் அவர் வெளிப்படுத்திய சிந்தனைகள், சமூகம் சார்ந்த சிந்தனைகளையும் மீறி அவர் வெளிப்படுத்திய சிந்தனைகள் ஆகிய இரண்டையும் மனத்திற் கொள்ளவேண்டும்.

பாரதியின் பாடல்களைப் பொறுத்தவரை 'பக்திப்பாடல்கள்' என்ற தலைப்பின் கீழ்த் தொகுக்கப்பட்டுள்ள கவிதைகளில் இந்து மதம் தவிர மற்ற மதக்கடவுள்கள் பற்றிய பாடல்களைக் காணமுடியாது.

'வேதாந்தப் பாடல்கள்' என்ற தலைப்பின் கீழ்த் தொகுக்கப்பட்டுள்ள 'அல்லா', 'யேசுகிறிஸ்து' ஆகிய இரண்டு பாடல்கள் மட்டுமே பாரதி புறச் சமயங்கள் பற்றிப் பாடிய பாடல்களாகும். இவற்றை மேலோட்டமாக நோக்கும் போது பாரதியைத் தீவிர இந்து மதப் பற்றாளர் என்பதை எளிதில் முடிவு கட்டிவிடலாம். பாரதியின் கட்டுரைகளிலும் இந்து மதத்தைப் பற்றிய கட்டுரைகள் அதிகம். அவற்றை எல்லாம் ஒட்டுமொத்தமாகச் சேர்த்து நோக்கினால் மட்டுமே நாம் பாரதியைச் சற்றேனும் புரிந்துகொள்ள முடியும்.

## பாரதியின் உலகப்பார்வை

இந்தியாவில் ஒரே சாதிதான் உண்டு, அதுவும் இந்துசாதி மட்டுமே என்றும், இந்திய மக்கள் அனைவரும் இந்துக்களே என்றும் பாரதி அழுத்தமாக எடுத்துரைக்கின்றார். இதனை "இந்தியாவில் பிறந்த எல்லாருமே இந்துக்கள். இந்தியா, இந்து, ஹிந்து ஆகிய

மூன்றும் ஒரே சொல்லின் திரிபுகள். இந்தியாவில் பிறந்தவன் இந்திய ஜாதி அல்லது இந்து ஜாதி" (பா.க.ப.405) என்ற கருத்துடையவர்-எனும் கூற்றால் அறியலாம்.

இந்து மதத்தின் மேல் அவர் கொண்டிருந்த ஆழ்ந்த பற்றினால் இந்து மக்கள் பிற மதங்களுக்கு மாறுவதைக் கண்டு மனம் கொதித்திருக்கிறார்.

குறிப்பாக இந்தியாவில் வர்த்தக ரீதியாகத் தொடர்பு கொண்ட ஆங்கிலேயர்கள், ஆட்சியைப் பிடித்தனர். பின்னர்த் தங்கள் மதப்பிரச்சாரங்களின் மூலம் மக்களிடம் மனமாற்றத்தை ஏற்படுத்தி மதமாற்றத்தில் ஈடுபடுத்தினர். இது ஒருவகையில் அந்நிய ஆதிக்கப் பிடியை வலுப்படுத்தும் விதமாக இருந்ததால் பாரதி அதனைக் கண்டு மனம் குமுறுகிறார்.

கிறித்தவர்கள் இந்து மதத்தைப் பற்றிய பொய்ப்பிரச்சாரத்தில் ஈடுபட்டனர். சமூக நிலையில் (அந்தஸ்து) மதிப்புக் கிடைக்காத மக்களிடம் அன்பு காட்டி அவர்களை மதமாற்றம் செய்யத்தூண்டினர். 'இந்துக்கள் குழந்தைகளை நதியில் போடச் சொன்னார்கள், அவ்வாறே அநாதையாகப் புருஷர்களை இழந்து நிற்கும் பெண்களையும் ஆற்றில் போடச் சொன்னார்கள்' என்றெல்லாம் பொய்ப்பிரச்சாரத்தில் ஈடுபடுகிறார்கள் என்பது பாரதியின் கருத்து. மேலும், நம்முடைய ஜாதிப் பிரிவுகளில் உள்ள குறைபாடுகளைப் பெரிதுபடுத்தி இந்துக்களுக்குப் பெரிய அவமானத்தை ஏற்படுத்துகிறார்கள் என்றும் கருதுகிறார் (பாரதி உரைநடை ஆய்வு, ப.186).

'ஹிந்துக்களின் கூட்டம்' என்ற தலைப்பில் அவர் எழுதிய கட்டுரையொன்றில் பாதிரியார் ஒருவர் ஆண், பெண், குழந்தைகள் என ஏறக்குறைய முந்நூறு பேரைக் கிறிஸ்து மதத்தில் சேர்த்து விட்டதாகக் குறிப்பிடுகிறார். அதற்குக் காரணம் இந்துக்களின் விழிப்பற்ற நிலையே! என்று வருந்திக் கூறுகிறார்.

> **"ஹிந்துக்கள் வருத்தப்படத்தக்க செய்திதான் அது. ஹிந்துக்களுடைய ஜனத்தொகை நாளுக்கு நாள் குறைவுபட்டு வருகிறது. கவிதையிலுள்ள மலைப்பாம்புபோல, வாலில் நெருப்புப் பிடித்தெரியும் போது தூங்கும் வழக்கம் இனி ஹிந்துக்களுக்கு வேண்டாம். விழியுங்கள்; ஜனத்தொகை குறையும் போது பார்த்துக்கொண்டே சும்மா இருப்போர் விழித்திருக்கும்போதே தூங்குகிறார்கள்; அவர்கள்**

> கண்ணிருந்தும் குருடர்" ('பாரதியார் கட்டுரைகள்', பக்.410–411)

என்று இந்துக்களை வன்மையாகக் கண்டிக்கிறார்.

இந்து மதத்திற்கு ஆணிவேராக இருந்துவரும் மடங்களும், ஆதீனங்களும் மக்களை ஒன்று சேர்க்கும் முயற்சியில் கவனம் செலுத்தத் தவறிவிட்டதால் இத்தகைய மதமாற்றங்கள் ஏற்பட்டன. இதற்கான தீர்வுகளை, இக்கட்டுரையில் குறிப்பிடுகிறார் பாரதியார்.

மற்ற மதத்தினரைக் காட்டிலும், மற்ற தேசத்தினரைக் காட்டிலும் இந்துக்கள் மேலானவர்கள், இந்துக்களிடம் உள்ள தெய்வபக்தி என்ற சிறந்த குணம் மற்றெல்லா மதத்தினரைக் காட்டிலும் அதிகம் என்பதைக் கருத்தில் கொண்டு, இருக்கின்ற இந்துக்களை மதம் மாறாமல் தடுப்பது, இந்தியாவில் உள்ள மக்கள் அனைவரையும் இந்துக்களாக மாற்றுவது என்ற இரண்டு நிலைகளில் தனது கருத்தை முன்வைக்கிறார்.

பாரதி, தாழ்த்தப்பட்டவர்களைப் பூணூல் அணியச் சொன்னது, இந்திய நாட்டில் உள்ளவர் அனைவரும் இந்துக்களே என்றது ஆகியவை ஒன்றிணைந்த இந்தியாவை உருவாக்கும் முயற்சியால் சொல்லப்பட்டவை என்று கொள்வதே பொருத்தப்பாடுடையதாகும்.

பாரதி கால இலக்கியவாதிகளிலிருந்து பாரதி வேறுபட்ட காரணங்களும், பாரதியின் உலகம் தழுவிய பார்வையும் இவ்வியலின் பிற்பகுதியில் விளக்கப்பட்டுள்ளன.

## பூணூல் புரட்சி

சமூக ரீதியில் உயர்ந்திருந்த பிராமணர்களைப் போல் மற்றெல்லாரையும் உயர்த்தவேண்டும் என்று நினைத்தார். இருப்பவர்களைத் தாழ்த்திப் பார்ப்பது அறிவாளிகளின் இயல்பல்ல.

உயர்ந்தவரையும் தாழ்ந்தவரையும் வேறுபடுத்திக் காட்டியது அவர்களின் புற அடையாளங்கள் தான். குறிப்பாகப் பூணூலும், விபூதிப்பட்டையும் தான்.

பாரதியாருக்குப் பூணூல் மேல் ஓர் உயரிய அபிப்பிராயம் இல்லை என்றே சொல்லத் தோன்றுகிறது. அதைப் பின்வரும் சான்று நமக்கு உறுதிப்படுத்தும்.

> **"பூணூலை எடுத்துப் போடுங்கள், இந்தியா முழுவதும் ஒரே ஜாதி, ஒரே உடுப்பு, ஒரே ஆசாரம் என்றும் செய்து விட வேண்டும்" (பா.க. ப. 416).**

என்று வீரப்ப முதலியார் கூறியதற்கு,

*"வேண்டியவர்கள் எல்லாம் பூணூல் போட்டுக் கொள்ளலாம். அது யாகத்துக்கு வெளியடையாளமாக அந்தக் காலத்தில் ஏற்பட்டது. இஷ்டமான ஹிந்துக்கள் எல்லாரும் பூணூல் போட்டுக்கொள்ளலாம். மற்றவர்கள் சரி சமானமாக இருக்கலாம். பூணூல் இருந்தாலும் ஒன்று போலே இல்லாவிட்டாலும் ஒன்று போலே. ஹிந்துக்களெல்லாம் ஒரே குடும்பம்"*
*(பா.க. ப.420)*

என்று வாதிடுகிறார். பூணூலை அறுத்துப்போடுவதால் வெறுமை ஏற்படுகின்றது. 'இல்லை'-என்பதைவிட 'ஏற்றல்-இருக்கிறது'-என்பது பயன்பாடுடையதாகும் என்று பாரதி கருதியதாலேயே பூணூல் போட்டுவிட்டது இருக்கவேண்டும்.

நந்தனாரையும், திருப்பாணாழ்வாரையும் கும்பிடும் ஹிந்துக்கள் அவர்கள் வழிவந்தவரைப் புறக்கணித்தனர். அவர்கள் வழிவந்தவர்களுக்கு நியாயம் கிடைக்கவேண்டும் என்பதையே பாரதி விரும்பினார்.

முதலில் பறையர்களை எல்லாம் ஒன்று திரட்ட வேண்டும். அவர்களுக்கு விபூதி, நாமத்தைப் பூச வேண்டும். அவர்களுக்கென்று பள்ளிக்கூடங்கள் வைத்துக்கொடுக்க வேண்டும். கிணறு வெட்டிக் கொடுக்க வேண்டும். அவர்களை இரண்டு வேளை குளிக்கச் செய்ய வேண்டும். இது ஒன்றே ஓர் ஏற்றத்தாழ்வற்ற இந்தியச் சமுதாயத்தை உருவாக்கும் உபாயமாகப் பாரதி கருதினார். இதற்காக அன்று செல்வத்தால் பலம் பெற்றிருந்த மடாதிபதிகளிடமும், நாட்டுக் கோட்டைச் செட்டியார்களிடமும் மன்றாடினார். இதை அவர்களிடம் நேரடியாகக் கேட்டால், யார்தான் தனக்குக் கீழ் உள்ளவரைத் தனக்குச் சமமாக வைத்துக்கொள்ள எண்ணுவார்கள் என்று கருதியிருக்கவேண்டும். அதனால்தான் 'ஹிந்து தர்மம்' என்ற ஆயுதத்தைக் கையில் எடுத்துக்கொண்டு அவர்களை வழிக்குக் கொண்டுவரப் போராடினார்.

**ஹிந்து தர்மத்தை நிலைக்கச் செய்யுங்கள், நம்முடைய பலத்தைச் சிதறவிடாதேயுங்கள் மடாதிபதிகளே! நாட்டுக் கோட்டைச் செட்டிகளே! இந்த விஷயத்தில் பணத்தைவாரிச் செலவிடுங்கள். இது நல்ல பயன்தரக்கூடிய கைங்கர்யம். தெய்வத்தின் கருணைக்குப் பாத்திரமாகும் கைங்கர்யம் (பா.க. ப.425)**

என்று பாரதி கூறுவதிலிருந்து அவரது மன நிலையை நாம் ஒருவாறு அனுமானிக்கலாம்.

மேலும், மேல்சாதி ஹிந்துக்கள் பறையரையும் சமத்துவமாக நினைக்க வேண்டும் என்பதற்காக, அவர்களும் நம்மைப்போல் இந்துக் கடவுள்களையே வணங்குகின்றனர். எனவே அவர்களும் நமக்குச் சகோதரரே. அவர்களைக் கைத்தூக்கிவிட்டு மேல்நிலைக்குக் கொண்டுவருவது நமது முதற்கடமையாகக் கொள்ளவேண்டும் என்று கூறிப் பின்வரும் பாடல் ஒன்றை மேற்கோளாய்க் காட்டுகிறார்.

**"அங்கமெலாங் குறைந்தழுகுந்**
**தொழு நோயராய்**
**ஆவுரித்துத் தின்றுழலும்**
**புலையரேனும்**
**கங்கை வார் சடைக்கரந்தார்க்**
**கன்பராயின்**
**அவர் கண்டீர் யாம்**
**வணங்கும் கடவுளாரே! (பா.க. ப.426)**

### சாதிப் பிரிவினைகள்

அவர்காலத்தில், மனிதர்களில் மட்டும் அல்லாமல் விலங்குகளில் கூடச் சாதி வேற்றுமைகள் பாராட்டிக் கொண்டிருந்தனர்.

யானைகளில் பிரம்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திர யானைகள் என்றிருந்தன. சூத்திரர்களிலே 'ஈழுவர்' என்ற சாதியர் இருந்தது போலவே யானையில் அந்தச் சாதியைப் போல 'வீரன்' என்ற வகுப்பைச் சார்ந்த யானை ஒன்றைப் பற்றிக் குறிப்பிடுகிறார். மனித சமுதாயத்தில் சாதி வித்தியாசம் வேரூன்றி இருந்தது. யானையில் உள்ளது போலவே, குதிரையிலும் சாதி, வானத்தில் உள்ள கிரஹங்களில் அதே மாதிரி ப்ரம்ம க்ஷத்திரிய பேதங்கள், ரத்தினங்களில் கூட சாதிபிரித்து வைத்திருந்தது பாரதி காலச் சமுதாயம்.

பறையர்கள் என்றால் அதில் பதினெட்டுச் சாதி, நுளையர்கள் என்றால் அதில் நூற்றெட்டுச் சாதி. இவர்களை எல்லாம் ஒன்றிணைக்கும் ஒரே கருவியாகத்தான் பாரதி இந்து மதத்தைக் கருதியிருக்கிறார்.

இந்தச் சாதி வேறுபாடுகளைத் தகர்த்தெறிவதற்குத் தடைக்கல்லாக நின்றது அவர்களிடம் இருந்த கல்விநிலை. எல்லா

வகுப்பினருக்கும் சரியானபடி படிப்புச் சொல்லிக் கொடுப்பதால் மட்டுமே அவர்களைச் சமப்படுத்த முடியும், என்பது பாரதி வாக்கு. (பா.க. ப.432).

சாதிபேதமற்ற உயர்ந்த வாழ்விற்குப் பாரதி கூறுவன,

1. 'மாமிஸ போஜனம் செய்யும் வகுப்பினர் அதை நிறுத்திவிட வேண்டும்.' அதன் மூலம் அவர்கள் அனைவரையும் பிராமணராக்கிவிட வேண்டும்.

2. பிராமணர் அல்லாதவர்க்குப் பூணூல் போட்டுக் காயத்திரி மந்திரம் கற்பித்துக்கொடுக்க வேண்டும். அதனால் இந்தியா முழுமையையும் பிராமண தேசமாக மாற்றவேண்டும்.

என்ற கருத்துகள் பாரத தேசத்தைச் சரிசமமாக்க விவேகானந்தர் சொன்ன வழி. இதில் ஓரளவிற்கு உடன்பட்ட பாரதி, இவை எல்லாவற்றையும் விட மேல் வகுப்பினர் தம்முடைய உயர்வை மறந்து கீழ் வகுப்பினருடன் கலத்தலையே சிறந்த வழியாகக் கருதுகிறார் (மேலது, ப.432).

சாதிய ரீதியில் இந்துக்கள் அனைவரும் ஒரே சாதி. சமூகத்தில் அன்று உயர்ந்திருந்த பிராமணசாதி என்ற கொள்கையில் நின்று முதலில் மக்களை ஒன்று திரட்ட முயன்றிருக்கிறார். அடுத்து அவர் மத ரீதியில் கொண்டிருந்த கொள்கைகளையும் இங்கே தொகுத்து மதிப்பிட்டுக் கொள்ளுதல் அவசியம்.

### அனைவரும் இந்துக்கள்

இந்தியாவில் பிறந்த அனைவரையும் இந்துக்கள் என்ற அடிப்படையிலேயே காணும் பாரதி, இந்தியாவில் உள்ள முகமதியர்களைக் கூட இந்துக்களின் சந்ததியினர் என்கிறார். ஜப்பானில் பிறந்தவன் ஜப்பானியன், சீனத்தில் பிறந்தவன் சீனன் என்பது போல் இந்தியாவில் பிறந்தவன் இந்து என்ற கருத்தில் உறுதி கொண்டிருந்தார் (பா.க. ப.405).

தமிழகத்தில் சாதி அடிப்படையில் நிலவி வந்த பேதங்களைச் சீர்செய்தது போலவே இந்துக்கள் முஸ்லீம்கள் இவர்களிடையே உள்ள பேதங்களைக் களைவதற்குச் சில உபாயங்களைச் சொல்கிறார்.

1. இந்துக்களில் சிலர் முகம்மதிய வேத சாஸ்திரங்களைப் படித்து அவற்றிலே தேர்ச்சி பெறவேண்டும்.

2. அங்ஙனமே முகம்மதியர்களில் சிலர் சமஸ்கிருதம் படித்து இந்துக்களுடைய வேத சாஸ்திரங்களை அறிந்துகொள்ள வேண்டும்.

3. இந்துக்களுடைய மனத்திலே முகமதியர் நமது தேசத்தார் என்பதும், தேவதை வேறாக இருப்பதைப் பற்றி அவர்களை மிலேச்சரென்று நினைப்பது கூடப்பிழை என்பதையும் நன்றாக ஞாபகம்வைத்துக்கொள்ள வேண்டும்.

4. மஹம்மதியரும் அவ்வாறே இந்துக்களைக் காபிர் (அவிசுவாஸிகள்) என்று நினைப்பது பெரிய தவறென்று தெரிந்து கொள்ள வேண்டும்.

5. விவாகம் முதலிய சோபன காலங்களில் இந்துக்கள் முஸ்லீம்களையும், முஸ்லீம்கள் இந்துக்களையும் அழைத்து உபசாரங்கள் செய்து தனியாக விருந்துகள் செய்துவைக்க வேண்டும்.

மேற்கண்டவை பாரதியின் கூற்றல்ல. ஸ்ரீ நாராயண சாஸ்திரி அவர்கள் பேச்சிலிருந்து பாரதி உடன்பட்ட கருத்துக்கள். இதுபோல் சில முக்கியச் சீர்திருத்தக் கருத்துகளைப் பாரதி பிறர் கூற்றிலிருந்தே எடுத்துக்கூறுகிறார். இதனால் பாரதியின் சுய சிந்தனையைச் சந்தேகிக்கலாகாது. எல்லாக் கருத்தையும் தாமே மொழிய வேண்டும் என்ற குறுகிய நோக்கம் உடையவர் அல்லர் பாரதி என்பதைத்தான் இது காட்டுகிறது.

மேற்கண்ட இந்து முஸ்லீம் ஒற்றுமை பற்றிய கருத்தை இந்து-முஸ்லீம் தலைவர்கள் கவனித்து அந்தந்த இடங்களில் இயன்றவரை சகோதர பாவத்துடன் நடந்துகொள்ள வேண்டும் என்பதையே பாரதி விரும்புகிறார் (பாரதி தமிழ், ப.149).

## பாரதியின் பெருந்தன்மை

முகம்மதிய இனத்திற்கு எதிராக எழுத நேர்ந்தால் அதற்கான தகுந்த விளக்கங்களை அவர் எழுதத் தவறியதில்லை.

'சத்ரபதி சிவாஜி' என்ற தலைப்பில் சிவாஜி தன் படைவீரர்களிடம் சொல்லும் வீரவசனங்களில்,

> "வேத நூல் பழிக்கும் வெளித்திசை மிலேச்சர்
> பாதமும் பொறுப்பளோ பாரத தேவி?"
>
> (பா.க., ப.171)

போன்ற சில இடங்களில் இஸ்லாமியரைப் பற்றி விமர்சித்திருக்கிறார். இப்பாடல் பற்றி 1906 நவம்பர் 17ஆம் தேதி

இந்தியா வார இதழில் அவர் எழுதியுள்ள விளக்கத்தைச் சற்று உற்றுநோக்க வேண்டும்.

> "இந்தச் செய்யுளிலே நமது மகமதிய சஹோதரர்களுக்கு விரோதமாகச் சில வசனங்கள் உபயோகிக்க நேர்ந்திருப்பது பற்றி விசனமடைகின்றோம். இக்காலத்து மகமதியர்கள் பாரத பூமியின் சொந்தப் புத்திரர்களென்பதையும், ஹிந்துக்களும் மகமதியர்களும் ஒருதாய் வயிற்றுக் குழந்தைகள் போல நடந்துகொள்ள வேண்டும் என்பதையும் பலமுறை வற்புறுத்தியிருக்கிறோம் என்ற போதிலும் சிவாஜி மஹாராஜா காலத்தில் ஹிந்துக்களுக்கும், முகமதியர்களுக்கும் விரோதமிருந்த படியால், அவர்களைப்பற்றி மஹாராஜா சிவாஜி சில கோபமான வார்த்தைகளைச் சொல்லியிருப்பது வியப்பாக மாட்டாது. செய்யுளில் மகமதியர்களைப் பற்றி வந்திருக்கும் பிரஸ்தாபங்களில் வீர ரஸத்தை மட்டும் கவனிக்க வேண்டுமே யல்லாமல், மகமதிய நண்பர்கள் தமது விஷயத்தில் உதாஸீனம் இருப்பதாக நினைக்கக்கூடாது என்று கேட்டுக்கொள்கிறோம்."
>
> (பாரதியும் சமூகமும், ப.151)

இந்த விளக்கம் பாரதியைப் புரிந்துகொள்வதற்கு உதவும்.

இதுபோல் சுதேசமித்திரன் இதழில் பாரதியார் எழுதிய 'ரெயில்வே ஸ்தானம்' என்ற கதைக்குப் பகிரங்கமாக மன்னிப்புக் கேட்டிருக்கிறார். 'ரெயில்வே ஸ்தானம்' என்னும் கதையின் கீழ் 'ஒரு சிறிய கதை' என்று தலைப்பிட்டு வெளிவந்திருந்தது. அதன் சுருக்கம் இதுதான்.

தென்காசி ரயில்வே ஸ்டேஷனில் செல்வச் செழிப்புள்ள ஒரு முகம்மதிய இளைஞன் அழுதுகொண்டு அமர்ந்திருக்கிறான். அங்கே கதை ஆசிரியர் (பாரதியார்) சென்று அவன் அழுது கொண்டிருப்பதன் காரணத்தைக் கேட்கிறார். அவன் தன் கதையைச் சொல்கிறான்.

அவன் பெயர் இஸ்மேல் கான். ஐதராபாத்தில் ஒரு ஏழைக் குடும்பத்தில் பிறந்தவன். அவன் தந்தை 'லாட்டரி' சீட்டு வாங்கியதில் திடீர் என்று கோடீஸ்வரனாகிறார். சில காலம் வாழ்ந்து அவர் இறக்கும் தறுவாயில் அவனை அவன் சிறிய தகப்பனிடம் ஒப்படைத்துவிட்டு இறக்கிறார். சொத்துக்கள் வெளியே சென்றுவிடாமல் இருக்க அவனது சிறிய தந்தை தனது மூன்று மகள்களையும் அவனுக்கு மணம்முடித்துவைக்கிறார்.

மூவர் மேலும் இவன் சமமாகவே அன்பைப் பொழிகிறான். அவன் மேலும் இந்த மூவரும் அன்பு வைத்திருக்கின்றனர். ஆனால், இவன் யாராவது ஒருத்திக்கு ஏதாவது வாங்கிக்கொடுத்தால் மற்ற இருவரும் இவனிடம் சண்டைபிடிக்கின்றனர். இந்நிலையில் அவன் வாழ்வில் ஒவ்வொரு கணமும் பிரச்சினையிலேயே கழிகிறது.

ஒரு நாள் முகமது நபி அவன் கனவில் வந்து யாரேனும் இருவரைத் தள்ளிவிட்டு வேறு விவாகம் செய்து கொள்ள விட்டுவிடச் சொல்கிறார். இவனும் அந்தக் கனவைத் தெய்வ சாசனமாகவே நம்புகிறான். ஆனால் அவன் தன் மூன்று மனைவியரிடமும் பிரியமாகவே இருக்கிறான். அதில் யாரைத் தள்ளுவது, யாரை வைத்துக்கொள்ளுவது என்ற குழப்பத்தில் இருக்கிறான்.

இக் கதையை அவன் ஆசிரியரிடம் கூறிக் கொண்டிருக்கும் போதே ரயில் வந்துவிடுகிறது. அவன் ஆசிரியரிடம் விடைபெற்றுச் சென்றுவிடுகிறான்.

“இந்தக் கடினமான விவகாரத்துக்குத் தீர்ப்புச் சொல்வதற்கு முன் ரயில் வந்ததே” என்று ஆசிரியர் சந்தோஷப்பட்டு,

> **“முகமது நபி கனவில் செய்த கட்டளைப் படியே அவன் நடந்து கொள்வானென்று நம்புகிறேன்”**
>
> **(பா.க., ப.218)**

என்று கதையை முடிக்கிறார்.

இந்தக் கதையைப் படித்த பாரதியின் இஸ்லாமிய நண்பர் பாரதியிடம் கதையில் பிழை இருப்பதாகக் கூறினார்.

பாரதியார் கதையில் முகம்மதியப் பிரபு மூன்று சகோதரிகளை மணம் செய்ததாக எழுதி இருந்தார். முகம்மதிய சாஸ்திரப்படி மூன்று சகோதரிகளான பெண்களை மணம் புரிந்து கொள்ளுதல் 'ஹராம்' (பாதகம்) என்று கருதப்படுகிறது. தன் மனைவி உயிருடன் இருக்கையில் அவளுடன் பிறந்த மற்ற சகோதரிகளை ஒரு இசுலாமியர் மணம் புரிந்துகொள்ளக்கூடாது. இவையே பாரதியின் நண்பர் சுட்டிக் காண்பித்த பிழைகள்.

இந்தப் பிழைகளுக்குப் பாரதி தன் நண்பரிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டார். இத்துடன் பாரதி நின்றிருந்தால் அவரைச் சராசரி மனிதர் என்ற தளத்திலிருந்து நாம் வேறுபடுத்திப் பார்த்திருக்க முடியாது. தான் செய்த தவறுக்குப் பத்திரிகை வாசகர்களிடமும் மன்னிப்புக் கேட்கிறார்.

"ரெயில்வே ஸ்தானம் என்ற கதையில் நான் மேலே கூறிய சாதாரணத் தவறு புகவிட்டது பற்றி பத்திராதிபரும் பத்திரிகை படிப்போரும் என்னைப் பொறுத்துக் கொள்ளும்படி வேண்டுகிறேன். உலகமெல்லாம் மாதர்களுக்கு நியாயம் செய்ய வேண்டுமென்ற கிளர்ச்சி நடப்பதை அனுசரித்து முஸ்லீம்களும் ஏக பத்தினி விரதம், பெண் விடுதலை, ஆண், பெண் சமத்துவம் என்ற கொள்கைகளைப் பற்றி மேன்மை அடைய வேண்டுமென்பதே என் கருத்து. இந்தக் கருத்து நிறைவேறும்படி பரமாத்மாவான அல்லாஹுத்த ஆலா அருள் புரிவாராக."

(பா.க., ப. 220)

இது பத்திரிகை வாசகர்களுக்குப் பாரதி எழுதிய மன்னிப்புக் கடிதம்.

இந்தக் கதையில் ஓரிடத்தில் பிராமணர்களையும் குறை கூறியிருக்கிறார். கதையின் தொடக்கத்தில் ரயில்வே ஸ்டேஷனின் சூழலை விவரிக்கும் போது, வெற்றிலைப்பாக்கு, புகையிலை, சுருட்டு, பீடி, பொடிப்பட்டை, முறுக்கு, தேன்குழல், சுழியன் இவற்றை வியாபாரம் செய்யும் பிராமணரும் சூத்திரரும் பகற்கொள்ளை நடத்திக்கொண்டிருப்பதாகக் குறிப்பிடுகிறார். அதாவது காசு பெறாத பொருட்களுக்கு மும்மடங்கு நான்கு மடங்கு விலை வைத்து விற்றுக்கொண்டிருந்தார்கள் என்பதையே இப்படிக் குத்தலாகக் கூறுகிறார்.

பிராமண சாதியிலே பற்றுடையவர்; இந்து மதத்திலே பற்றுடையவர் யாரும் இவ்வாறு கூறியிருக்க முடியாது என்பதை எண்ணிப்பார்க்க வேண்டும்.

இவற்றையும் மீறி பாரதியைப் புரிந்துகொள்ளாதவர்கள் அவருடைய காலச்சூழலைப் புரிந்துகொள்ள வேண்டும். குறிப்பாக அவர்காலத்திலும் அவருக்குச் சற்று முந்தைய காலக்கட்டத்திலும் உள்ள இலக்கிய வாதிகளிடமிருந்து இவரின் தனித்துவம், சமகாலத்திலிருந்த பத்திரிகை வாசகர்கள், அவர்களது மனப்பாங்கு ஆகியவற்றை முதலில் உணர்ந்துகொள்ளவேண்டும்.

அடுத்து அவர்காலத்தில் அந்நிய ஆதிக்கத்திற்கு எதிராக அவர் ஒன்றிணைந்த இந்தியச் சமுதாயத்தை ஒன்றுதிரட்ட முயன்ற காலத்தேவை.

மூன்றாவதாக அவரது உலகம் தழுவிய பார்வை. இவற்றை அறிந்து கொண்டாலன்றிப் பாரதியைப் புரிந்துகொள்ள முடியாது.

## பாரதி கால இலக்கியவாதிகள்

பாரதியார் வாழ்ந்த காலத்தில் உள்ள தமிழறிஞர்களிடையே இரண்டுவித மனோபாவங்கள் நிலவி வந்தன. ஒன்று பழந்தமிழ் இலக்கியங்களில் பற்றுக்கொண்டு மரபுக் கவிதைகளிலே பழைய பாணியிலான கவிதா உத்தியைக் கையாண்டு பாடல் இயற்றும் போக்கினர். இவர்கள் புதுமையைப் போற்றாதவர்கள். மற்றொரு வகையினர் பழந்தமிழ் இலக்கியங்களில் பற்றுக் கொண்டோராயினும் புதுமை நாட்டம் உடையவர்கள்.

பாரதிக்குச் சற்று முந்தைய காலக்கட்டத்தில் வாழ்ந்த இராமலிங்க சுவாமிகளின் பாடல்களில் தான் ஓரளவிற்கேனும் சமுதாயச் சிந்தையும் சீர்திருத்த எண்ணங்களும் நிறைந்திருந்தன. எனினும் இராமலிங்க சுவாமிகள் சமயச் சீர்திருத்தத்தில் ஈடுபட்டுத் தமதெல்லையைச் சமயம் என்ற அடிப்படையில் நிறுத்திக் கொண்டார். அவருக்குப்பின் வேதநாயகம் பிள்ளை உரைநடை வாயிலாகப் பெண்கள் முன்னேற்றம், சமுதாயச் சீர்திருத்தம் போன்றவற்றில் ஈடுபட்டார்.

இவரைப் போன்றே மாதவய்யா, ராஜம் ஐயர் போன்றோர் ஆங்கில இலக்கியம் ஏற்படுத்திய தாக்கத்தினால் உந்தப்பட்டு இலக்கியம் படைக்கத்தொடங்கினர். தமிழில் முதல் நாவலான 'பிரதாப முதலியார் சரித்திரம்' ஆங்கில முன்னுரையோடு வெளிவந்ததே இதற்குச் சான்றாகும். மேலும், மாதவய்யாவின் 'குசிகர் குட்டிக் கதைகள்' என்னும் நூல் அவர் ஆங்கிலத்தில் எழுதிய சில கதைகளின் தமிழாக்கம் என்பது மற்றொரு சான்று. இந்தச் சூழலில் தான் பாரதி பழமையில் காலூன்றிப் புதுமையில் வேரூன்றத் தொடங்கினார். இவர்காலத்தில் பத்திரிகை வாசகர் என்போர் பெரும்பாலும் மேல் தட்டு மக்கள், உயர்சாதிப் பிராமணர்கள். இலக்கியத் தொழிலில் ஈடுபட்டவர்களும், பத்திரிகை நடத்துவோரும் மேல் தட்டு மக்களே. எனவே இவர்களின் நடுவே இருந்துதான் சீர்திருத்தத்தைத் தொடங்கவேண்டிய நிர்பந்தம் பாரதிக்கு இருந்தது. எந்தவொரு கலைஞனும் தான் சார்ந்திருந்த சமயத்தையும், சமூகத்தையும் ஒரேயடியாக உதறிவிட்டுத் தனக்கென ஒரு புதுப்பாதை அமைத்துக்கொள்ள முடியாது. இந்த நிலையில் தான் பாரதியின் படைப்புகளில் சில இடங்களில் இந்து மதச்சார்பைக் காணமுடிகிறது.

## ஒன்றிணைந்த இந்தியா

அடுத்து அவர்காலத்தில் நிலவிய அன்னிய ஏகாதிபத்தியத்திலிருந்து விடுபட ஏதாவது ஒரு நிலையில், ஒரே

கோட்டில் மக்களை ஒன்றுதிரட்ட வேண்டும். ஆங்கிலேயர்கள் மக்களைப் பிரித்தாளும் உத்தியில் கைதேர்ந்தவர்கள். இவர்கள் இந்திய மக்களைப் பிரித்தாள்வதற்கு அடிப்படையாய் அமைந்தது இந்தியாவில் உள்ள மதப்போராட்டங்களும், சாதிப் பிரச்சினைகளுமே ஆகும்.

இந்நிலையில் தான் பாரதி ஒன்றிணைந்த இந்தியாவை உருவாக்க முயன்றிருக்கிறார். இந்துமதம் இந்தியாவில் பெரும்பான்மையான மக்களின் மதமாக இருந்திருக்கிறது. 'இந்து' என்ற வட்டத்திற்குள் இந்திய மக்கள் அனைவரையும் திணிக்க முயன்றது ஒரு முழுமை கருதியே என்பதைப் பாரதியைக் கூர்ந்து கவனிப்பவர்கள் உணரலாம்.

அது போல் சாதி என்ற தளத்தில் சமூகத்தில் அந்தஸ்து பெற்ற சாதியாகப் பிராமணசாதி இருந்தது. எனவே மக்களைப் பிராமணராக்கி ஒன்றுதிரட்டும் முயற்சியில்தான் அனைவரையும் பூணூல் போடச் சொன்னார் என்பதையும் ஒருவாறு யூகிக்கலாம்.

தேசவிடுதலை ஒன்றே பாரதியின் மையம். அதற்குத்தான் இந்த ஒன்றுதிரட்டல்கள். மற்றொன்று இந்து மக்கள் தம்மதத்திலேயே ஜாதி வேறுபாடுகாரணமாக மற்றவரோடு ஒன்றிணைவதில்லை. உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்ற பேதத்தில் உயர்ந்தவர்கள் தாழ்ந்தவரை அவமதிக்கும் போக்கே நிலவி வந்தது. இந்நிலையில் உயர்ந்தவரைத் தாழ்ந்தவராக்க நினைக்காமல் தாழ்த்தப்பட்ட வகுப்பினரை உயர்வாகக் கருதப்பட்ட வகுப்பினரோடு ஒன்றிணைக்க முயன்றார்.

மேலும், இந்துக்கள் இஸ்லாமியரையும் கிறித்தவர்களையும் புறச்சாதி என்று கருதிய சூழலில் அவர்களுக்குள் உடன்பாடு ஏற்படும் வகையில் இஸ்லாமியரையும் இந்துக்களாகவே பாவிக்க வேண்டும் என்று குரல் கொடுத்திருக்கிறார்.

## பாரதியின் பரந்த நோக்கு

பாரதி தன் நாடு, தன் மதம், தன் குலம் என்று குறுக்கிக் கொண்டவரல்லர். அவரது உலகளாவிய பார்வையே இதற்குத் தகுந்த சான்றாகும்.

உலகத்து மனிதர் அனைவரையும் ஒரே ஜாதி என்று கருதும் பாரதி, ஐரோப்பியர் மடிவதை எண்ணிக் கண்ணீர் சிந்துகிறார். இத்தனைக்கும் பாரதி சுதேசியத்தில் ஈடுபாடுள்ளவர். அப்படி இருந்தும் அவருக்கு ஐரோப்பியர் மடிவதில் சம்மதம் கிடையாது. எல்லா மனிதரும் ஒரே வகுப்பு, எல்லா மனிதரும் சகோதரர், மனித

வர்க்கம் ஒருயிர் என்பதில் அவர் தெளிவுடன் இருந்தே செயல்பட்டிருக்கிறார் (மகாகவி பாரதியார் மதிப்பீடுகள்).

இது பற்றிப் பாரதி மற்றோர் இடத்தில் கூறும்போது,

**"உலகத்து மனிதர்கள் எல்லாரும் ஒரே ஜாதி- 'வஸுதைவ குடும்பம்' என்ற பர்த்ருஹரியின் கொள்கையைத் தழுவியுள்ளேன். மனித ஜாதியும் மற்ற ஐந்து ஸமூஹங்களும் ஒரே குடும்பமென்ற (டி) பார்வன் என்னும் ஆங்கில சாஸ்த்திரியின் கருத்தைப் பின்பற்றுகிறேன். எல்லா ஜீவர்களும் கடவுளுடைய அம்சமென்ற பகவத் கீதையின் பரமோபதேசத்தைக் கடைப்பிடித்து நிற்கிறேன். ஒரு பிராமணனை, ஒரு ஆங்கிலேயனை, ஒரு ஆட்டைக் கொல்லுதல் அல்லது அடிப்பதால் எய்தும் பாவம் ஒரே மாதிரி. உபசரிப்பதால் அல்லது வணங்குவதால் எய்தும் புண்யமும் ஒரே தன்மையுடையது. இஃதென் உண்மையான, யான் ஒழுக்கப்படுத்திவருகிற கொள்கை" (பாரதி தமிழ், பக்.456-457)**

என்று தனது உயரிய லட்சியத்தைப் பதிவு செய்து வைத்திருக்கிறார். உயிர்களிலே கூட பேதம் பார்க்க விரும்பாதவரை நாம் 'வண்ண'க் கூண்டில் அடைத்துவைக்கலாகாது.

இதனால்தான் காக்கையையும், குருவியையும் தன்சாதியாக அவரால் கருதமுடிந்தது. கடல், மலை என்ற உயிரற்ற இயற்கைப் பொருளைக் கூடத் தன் கூட்டமாக நினைக்க முடிந்தது.

அன்பொன்றையே அவர் படைப்புகள் அடிநாதமாகக் கொண்டிருந்தன. போரும் போராட்டமும், பசியும், பட்டினியும் நிலவி வந்த காலத்தில் அன்பொன்றே அடிப்படைத் தேவையாய் இருந்தது.

**"அன்பிருந்தால் பயம் தெளிந்து போகும். ஒரே குடும்பத்திலே ஒருவரையொருவர் கண்டு மரணபயங் கொள்வதில்லை. உலகம் முழுவது ஒரே குடும்பத்தைப் போல் வாழக்கூடாதா?" (மகாகவி பாரதியார் மதிப்பீடுகள்)**

என்ற பேரவா அவர் உள்ளத்தில் குடிகொண்டிருந்தது.

மற்றொன்று பாரதி குற்றங்கண்டவிடத்து எல்லாரையும் ஒரே மாதிரியாகத்தான் நடத்துகிறார். இதில் சாதி பேதமோ

மதபேதமோ பார்ப்பதில்லை. எல்லாரையும் மனிதர் என்ற நிலையில்தான் குற்றம் கூறுகிறார்.

'பெண்' என்ற கட்டுரையில் பிரமராய அய்யர் என்றொரு பிராமணரைப் பற்றிக்குறிப்பிடுகிறார். பிரமராய அய்யர் சற்று முற்போக்கானவர். அவரிடம் உள்ள எல்லா முற்போக்குச் சிந்தனைகளையும் ஏற்றுக்கொள்ளும் பாரதியார் அவர் இந்துக்களைக் குறை கூறுவதை மட்டும் ஏற்றுக்கொள்ளவில்லை.

> "ஹிந்துக்கள் பரம மூடர்களென்று அவர் சொல்லும் வார்த்தையை மாத்திரம் நான் அங்கீகாரம் செய்து கொள்வது கிடையாது. மற்றபடி, அனேகம் விஷயங்களில் அவருடைய அபிப்பிராயங்கள் எனக்கு நியாயமாகவே தோன்றும்" (பா.க., ப.148)

என்று இந்துக்கள் மேலுள்ள விருப்பத்தால் கூறுகிறார்.

> "இந்துக்களில் நூற்றிற்குத் தொண்ணூறு பேர் மூடர்கள்" (பாரதி உரைநடை ஆய்வு, ப.7)

என்று மற்றோரிடத்தில் இந்துக்களைக் குறைத்துப் பேசுகிறார். குறிப்பாக ஹிந்து மக்களிடையே உள்ள மூடநம்பிக்கைகள், சகுனம் பார்த்தல் போன்றவற்றை வன்மையாகக் கண்டிக்கிறார்.

பிராமண சாதிக்குத் தாழ்த்தப்பட்டவரையெல்லாம் மாற்ற விரும்பிய பாரதி, தாழ்த்தப்பட்டவரைப் பற்றிக் கொண்டிருந்த எண்ணத்தைக் கீழே காணலாம்.

> "இந்நூலை, பாரத நாட்டில் உழவுத் தொழில் புரிந்து நமக்கெல்லாம் உணவு கொடுத்து ரக்ஷிப்பவர்களாகிய பள்ளர் பறையர் முதலிய பரிசுத்தத்தன்மை வாய்ந்த வைசிய சகோதரர்களுக்கு அர்ப்பணம் செய்கிறேன்" (பா.க., ப.346)

மேற்கண்ட குறிப்பு பாரதியார் தாம் எழுதிய "ஆறில் ஒரு பங்கு" நூலுக்கு எழுதிய முகவுரையில் உள்ளது. இது உயர்சாதி ஹிந்துக்களிடையே தாழ்த்தப்பட்டவர்களின் பெருமையைப் பறைசாற்றும் விதமாக உள்ளதை அறியலாம்.

பாரதி, முஸ்லீம்கள், கிறித்தவர்கள், பௌத்தர்கள் முதலியவர்களைப் பற்றிக் கூறும் கருத்துகளைத் தொகுத்து நோக்கினால் அவரது சர்வ மதப்பற்று நமக்குப் புலப்படும்.

"இஸ்லாம் மார்க்கத்தின் மஹிமை" என்ற கட்டுரையில் முகமது நபியின் வாழ்க்கை வரலாற்றைச் சுருக்கமாகக் கூறி, அவர்

வாழ்வில் தம்மை நெகிழச் செய்த பகுதிகளைப் பட்டியலிடுகிறார். இக்கட்டுரையில், பாரதியார், இஸ்லாம் மார்க்கத்தின் மேல் கொண்டிருந்த பற்றைக் காணமுடியும்.

அதேபோல், "யேசு கிருஸ்துவின் வார்த்தை" என்ற கட்டுரையும் கூர்ந்து நோக்கப்படவேண்டியது. இக்கட்டுரை யேசு கிறித்துவினுடைய கொள்கைகள் பற்றிய மேற்கோளாகவே நீள்கிறது.

இஸ்லாமிய, கிறித்தவ மதங்களைப் பற்றிப் புகழ்ந்தது போலவே பௌத்த மார்க்கத்தைப் பற்றியும் புகழ்ந்துரைக்கிறார். குறிப்பாக பௌத்தர்களிடையே நிலவும் ஆண், பெண் பாகுபாடற்ற வாழ்க்கையைப் போற்றுகிறார்.

இவற்றிலிருந்து பாரதி வந்த மதத்தையும், எந்தச் சாதியையும் குறைத்து மதிப்பிட்டவர் அல்லர் என்பதை உணரலாம்.

> **"மதம் என்ற இரும்புக் குண்டு காலில் கிடந்து இவ்வளவு இழுத்தாலும் செயல்வீரர் என்ற இயல்பின் காரணமாக, எவ்வளவோ முன்னேறியிருக்கிறார். காலில் கிடந்த அந்தக் குண்டை அறுத்து எறிவதற்குப் பதில் அதையே கையிலே எடுத்துக்கொண்டு எதிரியை விரட்டலாம் என்று நினைத்தார்"**
>
> ***(பாரதி ஆய்வுகள், ப.270)***

இக்கூற்றின் வன்மை மென்மைகளை ஆராய்ந்து இதை ஏற்றுக் கொள்ளலாம்.

மேலும்,

> **"பார்ப்பன கவி என்று புழுதிவாரி இறைப்போரும், வைதீகக் கவி என்று கட்டிப்புரள்பவரும் தங்கள், தங்கள் இயக்கங்களின் நோக்கங்களுக்காகப் பாரதியாரை அணுகித் தோல்வியை மட்டும் தழுவிக் கொள்கிறார்கள்"** ***(பாரதி ஆய்வுகள், ப.271)***

என்பதே இங்குக் கூறிவந்த கருத்துகளின் ஒட்டுமொத்த சாரமாகக் கொள்ளலாம்.

இவ்வியலில் உள்ள கருத்துகளைப் பின்வருமாறு தொகுத்துரைக்கலாம்.

1. தமிழறிஞர்கள் முழங்கும் மேடைகளிலும், பாடநூல்களிலும் பாரதியின் பாடல்கள் இடம்பெற்ற அளவிற்குப் பாரதியின்

கட்டுரையில் உள்ள கருத்துகள் இடம்பெறவில்லை. அவரது கட்டுரைகளும் கவிதைகளைப் போல் பரவலாக்கப்பட்டு, அதிலும் பல்வகை ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டால் தான் பாரதியின் படைப்பாளுமையைக் கண்டுகொள்ளமுடியும்.

2. பாரதி பெரும்பான்மையும் இந்துமதத்தின் சிறப்பைப் பற்றி விளக்கியே கட்டுரைகள் எழுதியுள்ளார். எனினும் பிறமதங்களைக் குறைத்து மதிப்பிடவில்லை.

3. பாரதி, சாதி என்ற அடிப்படையில் தாழ்த்தப்பட்ட மக்களையும் உயர்சாதிப் பிராமணர்களைப் போல் பூணூல் அணிந்து, விபூதிப் பட்டை போட்டுக்கொள்ளச் செய்கிறார். இந்துக்கள் அனைவரும் ஒரேசாதி எனக் கொண்டுவரும் எண்ணத்தில்தான் இத்தகைய முயற்சிகளை மேற்கொண்டார்.

4. அந்நிய ஆட்சிக்கு எதிராக மக்களை ஒன்றுதிரட்டும் முயற்சியில் ஈடுபட்ட பாரதி இந்தியாவில் பெரும்பான்மை மக்களின் மதமாக விளங்கிய இத்துமதத்திற்குள் அனைவரையும் கொண்டுவர முயன்றார். முஸ்லீம்களும் இந்துக்களே என்றார்.

5. பாரதி தன் நாடு, தன் குலம் என்று குறுக்கிக் கொண்டவரல்லர். பாரதி உலகத்தில் உள்ள உயிர்கள் அனைத்தும் ஓர் இனம் என்ற கருத்துடையவர். இந்த அடிப்படையில் காணும்போதே, பாரதியை முழுமையாகப் புரிந்துகொள்ள முடியும்.

# பெண்முன்னேற்றச் சிந்தனைகள்

இவ்வியல் பெண்கள் முன்னேற்றத்திற்காகப் பாரதி மேற்கொண்ட முயற்சிகளை எடுத்துரைக்கும் நோக்கில் அமைகின்றது.

பாரதி காலத்தில் பெண்களின் நிலைபற்றியும் அதைச் சீர்செய்யப் பாரதியின் சமகால இலக்கியவாதிகள் மேற்கொண்ட முயற்சிகளைப் பற்றியும் குறிப்புகள் இடம்பெறுகின்றன.

மண்விடுதலையை விரும்பிய பாரதி, அந்த மண் விடுதலை என்பது பெண் விடுதலை அடைந்தால் மட்டுமே கிடைக்கும் என்பதை வலியுறுத்திக் கூறிய கருத்துகள் தொகுத்து மதிப்பீடு செய்யப்படுகின்றன.

பெண் விடுதலை பெற வேண்டுமாயின் அவர்களுக்குக் கல்வி வேண்டும் என்று கூறிப் பல்வேறு தளங்களில் பெண்களின் கல்வி பற்றிய சிந்தனைகளை எடுத்துரைத்துள்ளார் மகாகவி. அக்கருத்துக்கள் இவ்வியலில் தொகுத்தாராயப்பட்டுள்ளன.

மேலும் இந்தியாவில் விதவைகளின் நிலை குறித்தும் இந்நிலையைச் சீர்செய்யப் பல்வேறு தலைவர்கள் மேற்கொண்ட முயற்சிகளைப் பற்றியும் அவற்றிலிருந்து பாரதி வேறுபட்டமை குறித்தும் இவ்வியலின் பிற்பகுதியில் விவாதிக்கப்படுகின்றன.

இறுதியாகப் பெண்ணியவாதிகளுள் பாரதியின் இடம் குறித்த விளக்கத்துடன் இவ்வியல் நிறைவுறுகிறது.

தமிழிலக்கியத்தில் பெண் விடுதலை, பெண்கள் முன்னேற்றம் என்று பேசும் எவரும் பாரதியைப் புறந்தள்ளிவிட்டுப் பேசிவிட முடியாது.

***"பெண்மை வாழ்கவென்று கூத்திடு வோமடா!***
***பெண்மை வெல்கென்று கூத்திடு வோமடா!"***

***(பா.க., ப.433)***

***"பட்டங்கள் ஆள்வதும் சட்டங்கள் செய்வதும்***
***பாரினில் பெண்கள் நடத்த வந்தோம்"***

***(பாரதியார் கவிதைகள், ப.431)***

இவை தமிழ்நாட்டு மேடைதோறும் முழங்கும் பாரதியின் முத்திரை வரிகள்.

### பாரதிகாலத் தமிழறிஞர்களின் பெண்ணியச் சிந்தனைகள்

பாரதி பெண்கள் பற்றிக் கவி பாடும் முன்னர்ப் "பெண்மதிமாலை" முதலிய நீதி நூல்கள் இயற்றிய வேதநாயகம் பிள்ளையவர்களும் பெண்கல்வி, பெண்கள் முன்னேற்றம் பற்றிச் சிந்தித்திருக்கிறார். தொடக்கக் காலத் தமிழ் நாவல்கள் அனைத்தும் பெண்களின் சமூகப் பிரச்சினைகளை மையமிட்டே அமைந்திருந்தன.

'பிரதாப முதலியார் சரித்திரம்' நாவலிலேயே பெண்களின் பிரச்சினைகளையும் அதற்கான நடைமுறைத்தீர்வுகள் சிலவற்றையும் வேதநாயகம் பிள்ளை விளக்கியுள்ளார். இதனைத் தொடர்ந்து வந்த "சுகுண சுந்தரி", மாதவையாவின் "பத்மாவதி சரித்திரம்", ராஜம் ஐயரின் "கமலாம்பாள் சரித்திரம்" முதலியவை, தலைப்பிலேயே பெண்களின் பெயரைத் தாங்கி நின்றதோடு மட்டுமல்லாமல் அக்காலத்தில் நிலவிய பெண்களின் சமுதாய நிலைகளையும் ஓரளவிற்குப் படம்பிடித்துக் காட்டின. எனினும் பாரதியின் பாடல்களைப் போல் இவர்களின் பெண்ணியச் சிந்தனைகள் செல்வாக்குப் பெறவில்லை.

இவர்களின் படைப்புகளைப் போலவே பாரதியின் உரைநடைப் படைப்புகளில் உள்ள பெண்ணியக் கருத்துகளும் அவர் பாடல்களைப் போல் செல்வாக்குப் பெறவில்லை. அதற்கான காரணங்களைச் சென்ற பகுதியிலேயே பார்த்தோம்.

### பாரதி காலப் பெண்களின் நிலை

பாரதி காலத்தில் பெண்களின் நிலை குறித்து ஒரு மேலோட்டமான பார்வைக்குப்பின் பாரதியின் பெண்ணியப் பார்வைக்குள் புகலாம்.

பெண் இயல்பிலேயே கொடூரமானவள், சுதந்திரத்திற்கு லாயக்கற்றவள் என்று 'மயித்ராஸி சம்ஹிதை' கூறுகிறது. பெண் ஆணுக்கு அடிமை என மனுதர்ம சாஸ்திரம் கூறுகிறது. இவை வடநாட்டு வைதீக மரபைச் சார்ந்த கருத்தென்றால் தமிழ் நாட்டில் தொல்காப்பியம் தொடங்கிப் பாரதி காலம் வரை பெண்களுக்கு இத்தகைய மதிப்பே நிலவிவந்தது (அரங்க மல்லிகா, பெண்ணிய குரலதிர்வும் தலித் பெண்ணிய உடல் மொழியும், ப.1).

> **"அச்சமும் நாணும் மடனும் முந்துறுத்த**
> **நிச்சமும் பெண்பாற்குரிய என்ப"        (தொல்.1045)**

என்று பெண்ணின் இயல்புகளை வரையறைப்படுத்தும் தொல்காப்பியர், "பெருமையும் உரனும் ஆடூஉமேன" (தொல்.1044) என ஆண்களின் குண நலன்களைச் சிறப்பித்துக் கூறுகிறார். இவரைப் பின்பற்றிச் சங்க காலத்திலும்,

**"வினையே ஆடவர்க்கு உயிரே வாணுதற்**
**மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிர்"** *(குறு. 135)*

என்ற கருத்தே நிலவியது.

பிற்காலத்தில் தமிழுலகம் நன்கறிந்த ஔவையார் கூட ஆத்திசூடியில்,

**"தையல் சொல் கேளேல்"**

என்று காட்டமாகக் கூறுகிறார்.

இப்படிப்பட்ட இலக்கிய மரபில் ஊறித்திளைத்த தமிழறிஞர்களைத்தான் பெரும்பாலும் பாரதி காலத்தில் காண முடிகிறது.

சொத்துகள் பிரிந்து போகாமலிருக்கக் குழந்தை மணம் நடைமுறையில் இருந்தது. பாரதிக்கே அந்தக் கதி நிகழ்ந்தது. பெண் கல்வி மறுக்கப்பட்டது. விதவைகள் உடன்கட்டை ஏற்றப்பட்டனர். சமீப காலம் வரை இந்தியா முழுமையிலும் வெவ்வேறு பகுதிகளிலும் பெண்சிசுக் கொலைகள் பரவலாக நடைபெற்று வருகின்றன. இதுபோல் வரதட்சணைக் கொடுமைகள் இன்று நடப்பதைவிடப் பன்மடங்கு அதிகமாகப் பாரதி காலத்தில் நடைபெற்றன.

**"ஒரு பெண்ணுக்கு விவாஹம் நடந்தபோது, அவளுடைய பெற்றோர் மாப்பிள்ளைக்குப் பணம் கொடுத்தார்கள். பிறகு ருது சாந்தியின் போது, அந்த மாப்பிள்ளை ஐந்நூறு ரூபாய் கொடுத்தால் தான் ருதுசாந்தி செய்துகொள்வேன் இல்லாவிட்டால் பெண் உங்கள் வீட்டோடு இருக்கட்டும் என்று சொல்லி ஐந்நூறு ரூபாய் தண்டம் வாங்கிக் கொண்டான்"**
***(பா.க., ப. 441)***

என்று பாரதியே ஓரிடத்தில் குறிப்பிடுகிறார். இத்தகைய சூழலில் தான் பாரதியின் எழுத்துலகப் பிரவேசம் நடைபெறுகிறது.

### பெண்விடுதலையும் மண்விடுதலையும்

பெண்ணுக்கு விடுதலை கிடைக்கும் போதுதான் மண்ணுக்கு விடுதலை கிடைக்கும் என்பது பாரதியின் நம்பிக்கை.

உருஷ்யப் புரட்சி பற்றி ஸ்டாலின் குறிப்பிடும்போது, அவருடைய செயல்பாடுகளை விட மார்க்ஸிம் கார்க்கி எழுதிய 'தாய்' என்ற நூல்தான் மக்கள் மனத்தில் புரட்சி எண்ணத்தைத் தூண்டியதாகக் குறிப்பிடுகிறார். மார்க்ஸிம் கார்க்கி 'தாய்' நாவலில் நாட்டில் உள்ள பெண்களிடம் விழிப்புணர்வு ஏற்பட்டால்தான் புரட்சியை நிகழ்த்த முடியும் என்ற கருத்தை மையப்படுத்தியிருந்தார். இதே கருத்தைத்தான் பாரதியும் தம் படைப்புகளில் மையப்படுத்தி இருக்கிறார்.

நாடு அடிமைப்படுத்தப்பட்டுக் கிடந்த சூழலில் நாட்டின் அடிமைத்தனத்திற்கு வீட்டில் பெண்களை அடிமைப்படுத்தியதே காரணம் என்கிறார்.

தொல்காப்பியர் காலந்தொட்டு பெண்கள் ஆண்களைவிடச் சற்றுக் குறைவான மதிப்புடையவர்களாகக் கருதப்பட்டாலும் அவ்வப்போது பெண்கள் பற்றிய உயர்வான கருத்துகளும் வராமலில்லை.

'மனைக்கு விளக்கம் மடவார்' என்றும், மனைக்கு விளக்கமானவளே 'மனைவி' என்றும், இல்லம் காப்பவள் 'இல்லாள்' என்றும் பெருமையுறப் பேசப்பெற்ற பெண்தான் இடைக்காலத்தில் வேற்று நாட்டவரின் வரவாலும் சில பொய்மைச் சமயங்களின் கூற்றாலும் பின்னுக்குத் தள்ளப்பட்டு அடிமையாய் நடத்தப்பெற்றாள். பெண்ணாகப் பிறந்தவர்கள் பாவம் செய்தவர்கள் என்றும் ஆணாகப் பிறந்தவர்கள் புண்ணியம் செய்தவர்கள் என்றும் கதை கட்டிவிடப்பட்டாலும், சொர்க்கம் என்பது ஆணுக்கு மட்டுமே உரியதென்றும், இப்பிறவியில் பெண்ணாகப் பிறந்தவர்கள் மீண்டும் ஆணாகப் பிறந்து அதன்பிறகே வீடு பேற்றினை அடையமுடியும் என்றும் சமயவாதிகளால் பேசப்பெற்றதாலும், பெண் புத்தி பின்புத்தி என்ற பழமொழியினைத் தந்ததாலும் ஆடவர்கள் பெண்களை மிகவும் இழிவாக நடத்தினர்.

"அடுப்பூதும் பெண்களுக்குப் படிப்பெதற்கு?" என்றனர். தன் மன உணர்வுகளைக் கூட வெளிப்படுத்த முடியாமல் அடிமைகளாய், ஆதரவற்றவர்களாய் மகளிரின் வாழ்க்கை அமையவே இதனைக் கண்டு வெகுண்ட பாரதி, பெண்கட்கு விடுதலை இல்லையென்றால் பின்னர் இந்த நாடே விடுதலையடைய முடியாது, என்று கூக்குரலிடுகின்றார்.

"பெண்ணுக்கு ஞானத்தை வைத்தான்–புவி
பேணி வளர்த்திடும் ஈசன்

மண்ணுக்குள்ளே சில மூடர் – நல்ல
மாதரறிவைக் கெடுத்தார்"

என்றும் பாடியவர், இந்தப் பெண்களின் நிலை கூட அவரவர் சார்ந்த சாதிக்கேற்ப மாறுவதையும் குறிப்பிட மறக்கவில்லை. தான் எழுதிய கதைகளின் வாயிலாகவும் இதனைப் புலப்படுத்துகின்றார்.

'மிளகாய்ப் பழச்சாமியார்' என்ற பகுதியில் ஒரு பெண்மணி தம்மிடம் பெண்களின் விடுதலைக்காக ஏதாவது செய்யவேண்டும் என்று கேட்டுக்கொண்டபோது இக்காலப் பெண்களின் நிலையைக் கூறுவதாகவும் படைத்திருக்கிறார்.

பார்ப்பனருக்கும் பறையருக்கும், கறுப்பு மனுஷருக்கும் வெள்ளை மனுஷருக்கும் நியாயம் வேண்டும் என்று சொல்பவர்கள் பெண்களுக்கு ஆண்கள் நியாயம் செய்ய வேண்டியதை மறந்ததாகக் குறிப்பிடுகிறார் (பாரதியார் கட்டுரைகள், ப23).

அந்தணர் குலத்துப் பெண்களுக்கு, மற்ற குலத்துப் பெண்களைக் காட்டிலும் கட்டுப்பாடுகள் அதிகம். வீட்டைவிட்டு வெளியில் வருதல் கூடாது. இளமை மணம். வேறு ஆடவர்களுடன் பழகுதல் கூடாது. குலமுறைக்கு ஏற்பத் தந்தை பார்க்கின்ற வரனை மட்டுமே மணந்து கொள்ளவேண்டும். விதவையாகிவிட்டால் மொட்டையடித்துக்கொண்டு வெள்ளை ஆடை மட்டுமே உடுத்துதல் முதலான பலவும் இன்றைக்கும் பல இடங்களில் நடைமுறையில் இருந்துவருகின்றன. இவற்றை விரும்பாத பாரதி, பெண்களுக்கு முழுமையான சுதந்திரம் தேவை என்பதை மிகுதியும் வற்புறுத்துகின்றார்.

"ஸ்வர்ண குமாரி" கதையின் நாயகி துணிவும், தெளிவும், கொள்கைப் பிடிப்பும் உடையவளாக இருப்பது, பாரதி, சமூகத்தில் பெண்கள் எப்படி இருக்கவேண்டும் என்று நினைத்தாரோ அதையே படம்பிடித்துக் காட்டுகிறது.

வரம்பில்லாத செல்வச் செழிப்பிலே வளர்ந்து சங்கீதம் சாஹித்தியம் முதலிய கலைகளிலே எல்லாம் சிறந்த பழக்கங் கொண்டவளாகித் தனக்கு இசைவான கணவனைத்தவிர மற்றபடி சாதாரண மனிதன் எவனையும் மணம் செய்துகொள்ளக் கூடாதென்று இவள் ஒரே பிடிவாதமாக இருந்தாள். இவள் மனத்திலே மனோரஞ்சனுடைய வடிவம் என்றும் அகலாத சுந்தர விக்கிரகமாகப் பதிந்துபோய்விட்டது. இவளுக்கு மனோரஞ்சன் என்பவன் பாலிய சினேகிதன். பள்ளித் தோழன். தேவரூபனான இவனையே கடைசிவரை பள்ளித் தோழனாகவும்

கொள்ளவேண்டும் என்று இவள் ஆசை கொள்கிறாள் என்று கதையின் நாயகியைப் பாரதி நமக்கு அறிமுகப்படுத்துகிறார்.

காதல் கொண்டமையால் இருவரும் அடிக்கடிச் சந்தித்துத் தம் உணர்வுகளையும் பகிர்ந்து கொண்டமையையும் குறிப்பிடும் பாரதி, தம் காதலுக்குத் தந்தை தடையாக இருப்பதையும் மனோரஞ்சனின் தாயும் தடையாக இருப்பதையும் நன்கு அறிகிறாள் என்கிறார்.

தந்தை, ஹேமச்சந்திர பாபுவைத்தான் திருமணம் புரிந்துகொள்ள வேண்டும் இல்லையேல், வீட்டை விட்டுத் துரத்தினால் தமக்கு அவமானம் ஏற்படும் என்பதால் ஹேமச்சந்திரனை மணப்பதாகக் கூறிவிட்டு மணநாள் வரையில் பொறுத்திருந்து இடையில் ஏதேனும் நல்லது நடக்காதா? என்று ஏங்குகிறாள்.

அப்படியே நடக்காது போனாலும் மணநாளன்று விஷம் குடித்துவிடலாம் என்ற முடிவோடு தந்தை கூறியபடி ஹேமச் சந்திரனைச் சந்திக்கச் செல்கின்றாள். இவளது பொறுமையும் நம்பிக்கையும் திடமான காதல் உறுதியும் பாரதியின் வரிகளில் ஆங்காங்கே மிளிர்கின்றன.

இந்தச் சூழலில் மணமகன் ஹேமச்சந்திரனின் தீய செயலால் தந்தை மனம்மாறுகிறார். ஒவ்வொரு பெண்ணும் ஸ்வர்ணகுமாரியைப் போன்று தெளிந்த சிந்தனையுடையவர்களாக இருக்கவேண்டும் என்பதைப் பாரதி வெளிப்படுத்துகிறார்.

## பாரதியும் பெண் கல்வியும்

பெண்கள் சமூகத்தில் சமநிலையடைய அவர்களுக்கு முறையான கல்வி யொன்றே வழிவகுக்கும் என்பதில் பாரதி திட சிந்தனை உள்ளவராக விளங்கினார்.

நம் நாட்டுப் பெண்களின் கல்வி அறிவைப் பெருக்கப் பலர் முயன்றாலும் பாரதியின் பணி குறிப்பிடத்தக்கது. பத்திரிகை வாயிலாகவும் அவர் செய்த அரும்பணிகள் போற்றுதற்குரியன.

தமிழ் நாட்டுப் பெண்கள் சம்பூர்ணமான விடுதலை பெற வேண்டுவராயின் அதற்குக் கல்வித் தோணியே பெரிய துணை என்கிறார். இதனால் கொஞ்சம் கொஞ்சம் பல துறைகளில் பயிற்சி பெற்றிருக்கும் தமிழ்ப் பெண்கள் இரவுபகல் பாராது பாடுபட்டு அவ்வத் துறைகளில் நிகரற்ற தேர்ச்சி பெற முயலவேண்டும் என்பது பாரதியின் பேரவா. இடைவிடாத பழக்கத்தால் தமிழ் மாதர்

தமக்குள்ள இயற்கையறிவை மிகவும் உன்னத நிலைக்குக் கொணர்ந்துவிடுதல் மிகவும் எளிதானதாகவே இவர் கருதுகிறார். ஔவையார் பிறந்து வாழ்ந்த தமிழ்நாட்டுப் பெண்களுக்கு அறிவுப் பயிற்சி எளிதாகவே இருக்கும் என்ற நம்பிக்கையுடன் இருக்கிறார். அறிவுத் திறத்தால் விடுதலைக் கோட்டையைக் கைப்பற்றுதல் வெகு சுலபம் என்பது இவர் எண்ணம். எனவே தமிழ்நாட்டு மாதரைப் பலவித சாஸ்திரங்களைப் படித்துத் தேறும்படி வற்புறுத்துகிறார். *(பா.க. ப. 177).*

ஆண் மக்களுக்குச் சமமான கல்வித் திறமை பெண்களுக்குப் பொதுப்படையாக ஏற்படும் வரை, ஆண் மக்கள் பெண் மக்களைத் தக்கபடி மதிக்கமாட்டார்கள். தாழ்வாகவே நடத்துவார்கள் என்று பாரதி கருதினார். அதனால் தான் பெண்கல்வியை அவர் இவ்வளவு தூரம் வற்புறுத்துகிறார்.

தேசியக் கல்வி பற்றிக் குறிப்பிடும் பாரதி தேசியக் கல்வியில் பெண்களின் பங்கு இல்லாவிட்டால் கல்வி முழுமையடையாது என்கிறார்.

தமிழ்நாட்டுப் பெண்களையும் சேர்த்துக்கொண்டு அவர்களுடைய யோசனைகளையும் தழுவி நடத்தாவிட்டால் அக்கல்வி சுதேசியக் கல்வியாகாது என்பார். தமிழ்க் கல்விக்கும் தமிழ்க் கலைகளுக்கும், தொழிலுக்கும் தமிழ்ப்பெண்களே விளக்குகளாவர் என்பதில் நம்பிக்கை கொண்டவர் பாரதி. அவர்,

> ***"தமிழ்க் கோயில், தமிழரசு, தமிழ்க் கவிதை, தமிழ்த் தொழில் முதலியவற்றுக்கெல்லாம் துணையாகவும், தூண் முதலாகவும் நிற்பது தமிழ் மாதரன்றோ"***
>
> ***(பா.க., ப.401)***

என்றும்,

> ***"தேசியக் கல்வியின் தமிழ்நாட்டுக் கிளையென ஒரு கிளை ஏற்பட வேண்டும். அதன் ஆட்சி மண்டபத்தில் பாதி தொகைக்குக் குறையாமல் தமிழ் ஸ்த்ரீகள் கலந்திருக்க வேண்டும். ஒரு பெரிய ஸர்வகலாஸங்கத்தின் ஆட்சி மண்டபத்தில் கலந்து தொழில் செய்யத்தக்க கல்விப் பயிற்சியும் லௌகிக ஞானமும் உடைய ஸ்த்ரீகள் இப்போது தமிழ்நாட்டில் பலர் இலர் என ஆட்சேபங் கூறுதல் பொருந்தாது"***
> ***(பா.க., ப.402)***

என்றும் கூறுகிறார். இவ்வாறு அவர் கூறுவதற்கு அவர்காலத்தில் பெண்ணுரிமையைக் கையிலெடுத்துப் பலர் முன்னுக்கு வந்ததே காரணம் எனலாம்.

அன்னிபெஸண்ட் அம்மையார் தம்முடன் திலகர், ரவீந்திரநாத் தாகூர் முதலியோரைச் சேர்த்துக்கொண்டு பெண்கல்வி, பெண்கள் முன்னேற்றம் ஆகியவற்றில் ஈடுபட்டுக்கொண்டிருந்தார். நீதிபதி சதாசிவ அய்யர் அவர்களின் மனைவி மங்களாம்பாள் முதலிய ஒன்றிரண்டு பெண்கள் சர்வகலாசங்கத்தின் ஆட்சி மண்டலத்தில் சேர்க்கப்பட்டிருந்தார்கள். தமிழ்நாடு முழுவதும் தேடிப் பார்த்து மங்களாம்பாளைப் போன்று இன்னும் பல பெண்களைச் சர்வகலாசங்கத்தில் சேர்க்கலாம் என்பதில் பாரதி அபார நம்பிக்கைக் கொண்டிருந்தார்.

இந்த ஆட்சி மண்டலத்தில் மேலும் பத்துப் பெண்களைச் சேர்த்து நடத்த வேண்டிய காரியங்களைப் பச்சைத் தமிழில் அவர்களிடம் கூறினால் அதிலிருந்து அவர்கள் பயன்படத்தக்க பல யோசனைகளை, ஆண்கள் எண்ணத்தில் தோன்றாத சிந்தனைகளை, புது ஞானங்களைச் சமைத்துக்கொடுப்பார்கள் என்று பாரதி நம்புகிறார்.

பாரதிக்கு முன்னால் வாழ்ந்த சான்றோர்களிடம் இத்தகைய எண்ணங்களைக் காண்பது அரிது. அவர்கள் பெண்கள் நல்ல குடும்பப் பெண்ணாக, மனைவியாக, நல்ல தாயாக வேண்டும் அளவிற்கு அவர்களுக்குக் கல்வியறிவு இருந்தால் போதுமென்று கருதினார்கள். ஆனால் பாரதி பெண்களை ஆண்களுக்கு நிகராகக் கொள்ளவேண்டும் என்றே கருதினார்.

ஒரு நாட்டின் வளர்ச்சி என்பது அதன் சமூக வளர்ச்சியைப் பொறுத்தே அமைகிறது. சமூக வளர்ச்சி அந்நாட்டில் உள்ள ஆண், பெண் இவர்களின் சமத்துவமான வளர்ச்சியில் மட்டுமே நிலைத்து நிற்கின்றது. பெண்கள் அறியாமை இருளில் மூழ்கி அடிமைப்பட்டுக் கிடக்கும்போது ஆண்கள் சுதந்திரம் பெறுவது இயலாது. இதை நன்கு உணர்ந்திருந்த பாரதி தம் படைப்பின் வாயிலாகப் பெண்கல்வியை வற்புறுத்துகிறார்.

அவர்காலத்துப் பெண்களின் கல்விக் கணக்குப் பற்றிப் பாரதியார் தம் கட்டுரையொன்றில் குறிப்பிடுகிறார்.

1901ஆம் ஆண்டுக் கணக்கெடுப்பின்படி 10,000 பெண்களுக்கு வெறும் 94 பெண்கள் மட்டுமே கல்விப் பயிற்சி பெற்றிருந்ததாகத் தெரிகிறது. இவர்களில் கூட கிறிஸ்தவப் பெண்களே

எண்ணிக்கையில் அதிகமாக இருப்பார்கள். கல்வியறிவில்லாமல் அறிவிருண்டுகிடக்கும் மாதரின் தொகை இவ்வளவு மிகுதிப்பட்டிருக்கும் தேசத்தின் முன்னேற்றம் குறித்துப் பாரதி மிகவும் வேதனைப்படுகிறார் (பாரதியின் பெண்ணியக் கட்டுரைகள், ப.1).

பெண்கள் கல்வி கற்றுத் தேர்ந்து தங்கள் நாயகர்களுக்கு உதவியாய் அவர்கள் காரியங்களிலும் சுதேசாபிமானம் நிலையிடும் விதத்திலும் உதவிபுரிய வேண்டும். கல்வியில்லாமல் பகுத்தறியும் சக்தியின்றிக் கிடக்கும் நிலையில் பெண்களின் சங்கம் தோன்றியது குறித்துப் பாரதி மிகவும் பெருமையடைகிறார் (மேலது, ப.3).

கவர்ன்மெண்ட் பள்ளிக்கூடங்களிலும்,. சென்னைப் பாதிரி பள்ளிக் கூடங்களிலும், நமது கன்னியர்களிலே ஓர் சிறு பகுதியாருக்குக் கொடுக்கப்படும் பயனற்ற கல்வியானது அறியாமையைக் காட்டிலும் நூறு மடங்கு கொடிதாகும் (மேலது, ப.4) என்று விளக்கும் பாரதி, ஊருக்கு ஊர் பெண் பாடசாலைகள் அமைப்பது, அதிலும் சுதேசியக் கல்வியைக் கற்பிப்பது முதலிய நெறிகளைப் பெண்கல்வியில் கடைப்பிடிக்க விரும்புகிறார்.

பெண்களின் குணம் அழிந்துவிட்டால் தேசத்தின் நிலை அழிந்து விடும். ஆகையால் பெண்களுக்குக் கற்பிக்கப்படும் கல்வியானது மிகவும் கவனத்துடன் கற்பிக்கப்பட வேண்டும் என்பதைப் பல இடங்களில் வலியுறுத்துகிறார்.

இக்கல்வியின் மூலம் தேசபக்திச் சிந்தனை குழந்தைகளுக்குத் தாய்ப்பாலுடன் சேர்த்தே ஊட்டப்பட வேண்டும் என்று வற்புறுத்துகிறார் (மேலது, ப7).

> **"ஐயா மாதர்களை இருட்டிலே, தள்ளிவிட்டு, அவர்கள் அறியாமல், நீங்கள் மேலான நிலைமைக்கு, வந்துவிட முயல்வது வீண் முயற்சி. அது ஒரு போதும் நடக்க மாட்டாது"** (மேலது, ப.14).

என்ற நிவேதிதா தேவியாரின் கூற்றை வேத வாக்காக எடுத்துக் கொண்டு பெண்கள் முன்னேற்றம் குறித்த தமது கருத்துகளை முன் மொழிகிறார். பெண்கள் முன்னேற்றத்திற்கான வழிகள் பற்றிப் பாரதி பின்வருமாறு பட்டியல் இடுகிறார். அவற்றைப் பெண்ணுரிமைச் சட்டங்கள் என்றே கூறலாம்.

### பெண்ணுரிமைச் சட்டங்கள்

1. பெண்களை ருதுவாகுமுன்பு விவாகம் செய்துகொடுக்கக் கூடாது.

2 அவர்களுக்கு இஷ்டமில்லாத கணவனைத் திருமணம் செய்து கொள்ளும்படி வற்புறுத்தல் கூடாது.

3. திருமணம் செய்துகொண்ட பிறகு அவள் புருஷனை விட்டு நீங்க இடம்கொடுக்க வேண்டும். அதன் பொருட்டு அவளை அவமானப்படுத்தக் கூடாது.

4. பிதுரார்ஜிதத்தில் பெண் குழந்தைகளுக்கு சமபாகம் செய்து கொள்வதைத் தடுக்கக் கூடாது.

5. திருமணம் இல்லாமல் தனியாக இருந்து வியாபாரம் கைத்தொழில் முதலியவற்றால் கௌரவமாக ஜீவிக்க விரும்பும் பெண்களை யதேச்சையான தொழில் செய்து வாழ்விக்க இடம்கொடுக்க வேண்டும்.

6. பெண்கள் கணவனைத் தவிர வேறு புருஷருடன் பேசக் கூடாதென்றும் பழகக் கூடாதென்றும் பயத்தாலும், பொறாமையாலும் ஏற்படுத்தப்பட்ட நிபந்தனையை ஒழிக்க வேண்டும்.

7. பெண்களுக்கும் ஆண்களைப் போலவே உயர்தரக் கல்வியின் எல்லாக்கிளைகளிலும் பழக்கம் ஏற்படுத்த வேண்டும்.

8. தகுதியுடன் அவர்கள் அரசாட்சியில் எந்தவித உத்யோகம் பெற விரும்பினாலும் அதைச் சட்டம் தடுக்கக்கூடாது (மேலது ப.44).

மேற்கண்ட சிந்தனைகள் "பெண் விடுதலை" என்ற தலைப்பில் பாரதி எழுதிய கட்டுரையில் காணப்படுகின்றன.

உலகில் அரசியல் சட்டம் ஒன்று இருக்கையில், அதில் உடன்பட்டோ, உடன்படாமலோ சமூகச் சட்டம் ஒன்று தனித்து இயங்கிக்கொண்டிருக்கிறது. அரசியல் சட்டம் புறவயமான தண்டனைகளோடு நின்று விடுகிறது. மக்கள் அடுத்தவர்க்குத் தெரியாமல் அரசியல் சட்டத்தை மீறுவதற்குப் பயப்படவில்லை. அதே வேளையில் பாவம், பழி என்று இறை நம்பிக்கையோடு கலந்துவிட்ட சமூகச் சட்டங்களை மீறுவதற்கு யாருக்கும் துணிவில்லை.

கணவனை விவாகரத்து செய்தால்அரசியல் சட்டம் அதற்கு இடம் கொடுக்கும். ஆனால், சமூகச் சட்டம்? இதைக் கவனத்தில் கொண்டுதான் பாரதி 'பெண் விவாகரத்து பெற்றால் ஊர்க்காரரும் அவளுக்கு ஆதரவாய் இருக்கவேண்டும், அவளைத் தூற்றக்கூடாது' எனக் கருத்துரைக்கிறார்.

பெண்ணுக்குச் சொத்துரிமை பற்றி அன்றே அவர் குரல் கொடுத்திருக்கிறார். இன்றுவரை ஒரு குடும்பத்தின் வாரிசு ஒரு பெண் என்றால் அக்குடும்பத்தின் சொத்து முழுவதும் அவளைத் திருமணம் செய்துகொள்பவனையே போய்ச்சேர்கிறது. ஆனால் பாரதி, பெண் திருமணம் செய்துகொண்டால் அவள் கணவனுடைய சொத்தை அவள் சொத்தாகவே பாவிக்க வேண்டும் என்கிறார் (மேலது ப.33).

> **“பெண்டாட்டி கையில் காசு கொடுக்கக்**
> **கூடாதென்று சொல்லுகிற மனுஷ்யர்களும்**
> **இருக்கத்தான் செய்கிறார்கள்”** **(மேலது)**

என்று எள்ளி நகையாடுகிறார்.

**விதவைகள் நிலை**

இந்தியாவில் விதவைப் பெண்களின் நிலைகுறித்த பாரதியின் கட்டுரையைக் காணும் போது நமக்குப் பேரதிர்ச்சி ஏற்படுகிறது. மகாத்மா காந்தியால் நடத்தப்பட்ட நவஜீவன் என்ற பத்திரிகையில் கைம்பெண்களான குழந்தைகளைப் பற்றிக் குறிப்பிடும் பகுதியை வேதனையுடன் எடுத்துக்காட்டியிருக்கிறார்.

ஒரு வயதிற்குள் மணம் புரிந்த மாதர்களின் எண்ணக்கை பதின்மூன்றாயிரத்து இருநூற்றுப் பன்னிரண்டு; அதில் விதவைகளின் எண்ணிக்கை ஆயிரத்துப் பதினான்கு. ஒன்றிலிருந்து இரண்டு வயதிற்குட்பட்ட குழந்தைகளில் பதினேழாயிரத்து எழுநூற்று ஐம்பத்து மூன்றுபேர் மணமானவர்கள். அதில் எண்ணூற்று ஐம்பத்தாறு பேர் விதவைகள். இரண்டு வயதிலிருந்து மூன்று வயதுவரை உள்ள குழந்தைகளில் நாற்பத்தொன்பதாயிரத்து எழுநூற்று எண்பத்தேழு பேர் திருமணம் ஆனவர்கள். அவர்களில் ஆயிரத்து எண்ணூற்று ஏழு பேர் விதவைகள். மூன்று முதல் நான்கு வயதிற்குட்பட்ட குழந்தைகளில் ஒரு லட்சத்து முப்பத்து நான்காயிரத்து நூற்று நான்கு பேர் திருமணம் ஆனவர்கள். அதில் ஒன்பதாயிரத்து இருநூற்று எழுபத்து மூன்று பேர் கைம்பெண்கள். நான்கு முதல் ஐந்து வயது வரை உள்ள குழந்தைகளில் மூன்று லட்சத்து இரண்டாயிரத்து நானூற்று இருபத்தைந்துபேர் திருமணமானவர்கள். அதில் பதினேழாயிரத்து எழுநூற்று மூன்று பேர் விதவைகள். ஐந்து முதல் பத்து வயது வரை உள்ள குழந்தைகளில் இருபத்திரண்டு லட்சத்து பத்தொன்பதாயிரத்து எழுநூற்று எழுபத்தெட்டுப் பேர் திருமணமானவர்கள். அதில் தொண்ணூற்று நான்காயிரத்து இருநூற்று நாற்பது பேர்

விதவைகள். பத்து முதல் பதினைந்து வயதுக்குட்பட்டவர்களில் ஒரு கோடியே எண்பத்தேழாயிரத்து இருபத்து நான்கு பேர் திருமணம் ஆனவர்கள். அவர்களில் இரண்டு லட்சத்து இருபத்து மூன்றாயிரத்து முப்பதிரண்டு பேர் விதவைகள் (மேலது, ப.139).

இப்படிப்பட்ட ஒரு நிலை எந்த ஒரு சாதாரண மனிதனையும் நிலைகுலையச்செய்துவிடும். பாரதி போன்ற சமூகச் சிந்தனையாளர்களுக்குப் பேரதிர்ச்சியை ஏற்படுத்தியிருக்கும். இதனால் தான் பாரதி விதவைகளைப் பற்றித் தம் கட்டுரைகளில் அதிகமாக எழுதியுள்ளார். இந்த விதவைகளின் நிலைமையைச் சீர்செய்யக் காந்தி இரண்டு வழிகளை மேற்கொள்ளச் சொல்கிறார்.

1. பால்ய விவாகத்தை நிறுத்திவிட வேண்டும்.
2. பதினைந்து வயதுக்குட்பட்ட கைம்பெண்களும் மற்ற இளமையுடைய கைம் பெண்களும் புனர் விவாகம் செய்து கொள்ள இடம்கொடுக்கவேண்டும்.

## காந்திக்கு மறுப்பு

இந்தக் கட்டுரையில் சில இடங்களில் காந்தியடிகளின் கருத்தை மறுத்து எழுதுகிறார் பாரதி.

> **"ஆண்மக்கள் புனர் விவாகம் செய்து கொள்வதில்லை என்ற விரதம் பூணுதலே விதவைகளின் தொகையைக் குறைக்கும் அருமருந்தாகும்"** (மேலது, ப.140).

என்ற காந்தியடிகளின் கருத்தினை மறுக்கின்றார். முதல் தாரத்தை இழந்தவன் பெரும்பாலும் கிழவனாய் இருப்பான். அவன் மறுபடி ஒரு சிறு பெண்ணை மணம்புரிந்துகொண்டால் அவன் விரைவில் இறந்துபோய்விடுவான். அதனால் அவனை மணந்து கொண்டவள் விதவையாகி விடுவாள். ஆதலால் ஒரு முறை மனைவியை இழந்தோர் பிறகு மணம் செய்துகொள்ளக்கூடாதென்பதே காந்தியின் கருத்து.

இதனை உள்வாங்கிக் கொண்டபார்தி இதற்கு மறுப்பாக, முதலில் இந்தக் கருத்துப்படி ஆண்மக்கள் ஒரு போதும் நடக்கமாட்டார்கள். இரண்டாவது பெரும்பாலும் கிழவர்களே முதல் தாரத்தை இழப்பதாகக் காந்தி கருதுவது தவறு. இந்தியாவில் சராசரி 25 வயதில் ஆண்களும், பெண்களும் மரணமடைகிறார்கள் என்பதைக் காந்தி மறந்துவிட்டதாகக் குறிப்பிடுகிறார் (மேலது, ப.141). எனவே இளவயதினர்களும் தத்தம் மனைவியை இழந்துவிடுகின்றனர். இவர்கள் ஒரு போதும் சந்நியாசிகளாய்ப்

போக விரும்பாதவர்கள். அப்படி அவர்களைத் துறவு பூணும்படி கேட்பதும் நியாயமற்றது என்கிறார்.

இத்துடன் இல்லாமல் தனக்கேயுரிய நகைச்சுவைபாணியில்,

> **"ஸ்திரீ—விதவைகளின் தொகையைக் குறைக்க வழி கேட்டால், ஸ்ரீமான் காந்தி புருஷ விதவைகளின் (அதாவது புனர் விவாகமின்றி வருந்தும் ஆண்மக்களின்) தொகையை அதிகப்படுத்த வேண்டுமென்கிறார். இதனின்றும், இப்போது ஸ்திரீ—விதவைகளின் பெருந்தொகையைக் கண்டு தமக்கு அழுகை வருவதாக ஸ்ரீமான் காந்தி சொல்லுவது போல், அப்பால் புருஷ விதவைகளின் பெருந்தொகையைக் கண்டு அழுவதற்கு ஹேது உண்டாகும்" (மேலது, ப.141).**

என்று எழுதுவது நோக்கத்தக்கது.

**விதவைகள் மறுவாழ்வு**

இவ்வாறு காந்தியை மறுக்கும் பாரதியார், விதவைகளின் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்குச் சில வழிமுறைகளைச் சொல்லுகிறார்.

1. விதவைகள் எந்த வயதிலும் தமது வயதிற்குத் தகுந்த ஆடவரை மறுமணம் செய்துகொள்ளலாம்.
2. அதுபோல் (மனைவியை இழந்த) ஆண்களும் எந்த வயதிலும் தம் வயதுக்குத் தக்க மாதரை மறுமணம் செய்துகொள்ளலாம்.
3. இந்த ஏற்பாட்டை உடனடியாக நடைமுறைக்குக் கொண்டு வரவேண்டும்.
4. வீண் சந்தேகம், பொறாமை, குருட்டுக் காமம், பெண்களை ஆத்மாவில்லாத, இருதயமில்லாத, ஸ்வாதீனமில்லாத அடிமைகளாக நடத்தவேண்டுமென்ற கொள்கை உடையவர்கள்தான் பெண்கள் புனர்விவாகம் செய்யக்கூடாது என்ற சட்டம் போட்டார்கள்.
5. அதனால் தான் மனைவியில்லாத கிழவர்கள் சிறுபெண்களை மணம் புரிய நேரிடுகிறது.
6. அதனாலே தான், இந்து தேசத்து விதவைகளின் வாழ்க்கை நரக வாழ்க்கையினும் கொடியதாய் எண்ணற்ற துன்பங்களுக்கு இடமாகிறது.

7. எல்லா விதவைகளும் மறுமணம் செய்துகொள்ள இடம்கொடுப்பதே இந்தியாவில் மாதருக்குச் செய்யப்படும் அநியாயங்கள் எல்லாவற்றிற்கும் பெரிதான இந்த அநியாயத்திற்குத் தகுந்த மாற்று.

இப்படி, பாரதியார் விதவைகளின் நல்வாழ்வுக்குக் கூறிய கருத்துகளைத் தொகுத்துரைக்கலாம்.

> ''பால்ய விதவைகள் புனர் விவாகம் செய்து கொள்ளலாமென்று ஸ்ரீமான் காந்தி சொல்லுகிறார். ஆனால் அதைக்கூட உறுதியாகச் சொல்ல அவருக்குத் தைரியம் இல்லை; மழுப்புகிறார்" (மேலது, ப.142).

என்று காந்தியைக் காட்டமாக மறுக்கிறார். காந்தியின் கருத்தை இப்படிக் கடுமையாக விமர்சிப்பதைக் காந்திய வாதிகளால் பொறுத்துக்கொள்ளமுடியாது. எனினும் பாரதியின் கூற்றில் நியாயம் இருப்பதை ஒத்துக்கொண்டுதான் ஆகவேண்டும்.

> "வாழ்க நீ! எம்மான், இந்த
> வையத்து நாட்டி லெல்லாம்
> தாழ்வுற்று வறுமை மிஞ்சி
> விடுதலை தவறிக் கெட்டுப்
> பாழ்பட்டு நின்ற தாமோர்
> பாரத தேசந் தன்னை
> வாழ்விக்க வந்த காந்தி
> மஹாத்ம! நீ வாழ்க! வாழ்க! (பா. க., ப.185)

என்று வாழ்த்திய கைகள்தான் மேற்கண்டவாறு கடுமையான விமர்சனத்தையும் எழுதியிருந்தன. குற்றம் கண்டவிடத்து அதைச் சுட்டிக் காட்டுதல், நிறை கண்டவிடத்து அதைப் போற்றிப் புகழ்தல் ஆகிய இரண்டு உயரிய குணங்களை நாம் பாரதியிடம் பல இடங்களில் காணலாம்.

இவ்விடத்தில் கைம்பெண்கள் பற்றிய சுவாமி விவேகானந்தரின் கருத்தையும் ஒப்பிடுவது அவசியம். ஏனெனில் பாரதி விவேகானந்தரின் சிந்தனைகளோடு பெரிதும் ஒத்து நடக்கிறார்; அவர் சிந்தனைகளை முழுவதும் ஏற்றுக்கொள்கிறார்.

கைம்பெண்களின் கண்ணீரைத் துடைக்காத தெய்வத்தையும் மதத்தையும் நம்பாதவர் விவேகானந்தர். கைம் பெண்களிடமும் கடவுளம்சம் இருக்கிறதென்பார் பாரதி.

கைம்பெண்கள் யார் என்ற வினாவிற்குப் பாரதி இப்படி விளக்கமளிக்கிறார்.

"கணவனை இழந்த மாதர். அவர்கள் கணவரை இழந்தார்களே யன்றி, உடலை இழக்கவில்லை. ஐம்புலன்களை இழக்கவில்லை; உணர்வை இழக்கவில்லை; மனுஷ்ய ஹிருதயத்தை இழந்துவிட வில்லை. காம விரும்பத்தை இழக்க வில்லை. காமக் கருவிகளை இழக்கவில்லை அவர்கள் கல்லாய்விடவில்லை மண்ணாய்விடவில்லை" (மேலது, ப.98).

என்று பாரதி எழுதக் காரணம் அவர்காலத்தில் கைம்பெண்களுக்கு இழைக்கப்பட்டுவந்த கொடுமைகளே ஆகும்.

கைம்பெண்கள் ஆபரணங்களின்றி இருக்க வேண்டும். அவர்கள் தலை மொட்டை யடிக்கப்படவேண்டும். விதவைகள் ஒரு நாளைக்கு ஒரு வேளைதான் சாப்பிடவேண்டும். கைம்பெண்களின் முகத்தில் விழிப்பது பாவம். வீதியில் சென்றால் எதிரே வருபவர் அபசகுனமாக நினைப்பார். இதில் பெரும்பான்மை இப்பொழுதுங்கூட நடைமுறையில் இருந்துகொண்டுதான் இருக்கிறது.

ஒருவன் விதவையைத் திருமணம் செய்துகொண்டால் அவனது உறவினர்களும் நண்பர்களும் அவனை ஏளனமாய்ப் பார்ப்பார்கள். சாதியிலிருந்து விலக்குவார்கள். சாகும்வரை உறவினருடன் அமர்ந்து உணவு கொள்ளவோ வேறுவகையில் உறவை நிலைநிறுத்திக்கொள்ளவோ முடியாத நிலை இருந்தது.

பரந்த இந்த உலகில் சாதியிலிருந்து ஒதுக்கிவைத்தால் பெரிய துன்பம் ஒன்றும் நேர்ந்துவிடாது. ஒரே செய்தியைப் பற்றி, ஒரே மனிதனைப் பற்றி எத்தனை நாள் தான் இந்த உலகம் தூற்றும். நாளடைவில் இது சரியாகிவிடும். ஊர் வாயை மூட ஓர் உலைமூடி உண்டு. அதன் பெயர், காலம். பின் முன்போலவே பழகத் தொடங்கி விடுவார்கள் என்ற கருத்துகளை விதவை மறுமணத்தில் ஏற்படும் பிரச்சினைகளுக்குத் தீர்வுகளாகப் பாரதி குறிப்பிடுகிறார் (பாரதி உரைநடை ஆய்வு, ப.155).

### பாரதிபார்வையில் பிறநாட்டுப் பெண்கள்

பிறநாட்டுப் பெண்களுடன் நம் பெண்களை ஒப்பிட்டு அவர்களைப் பின்பற்ற வேண்டும் என்று ஊக்கப்படுத்துகிறார் பாரதி. பலநாட்டு நூல்களையும், பிறமொழி நூல்களையும் படித்த அறிவும், பத்திரிகைத் தொழிலும் அவருக்கு உலகு தழுவிய பார்வை ஏற்பட வாய்ப்புத் தந்தது. பிற நாட்டுப் பெண்பாலர் பற்றி

பாரதியின் கட்டுரைகளில் உள்ள கருத்துகளைப் பின்வருமாறு தொகுத்துரைக்கலாம்.

1. துருக்கி தேசத்துப் பெண்கள் படிப்பு, ராஜ்யப் பொறுப்பிலே ஊக்கம் முதலிய சகல அம்சங்களிலும் விருத்தியாகிக் கொண்டு வருவதாக மிஸ் எல்லிசன் என்ற ஆங்கிலப் பெண்மணியின் புத்தகத்தில் படித்ததைப் பள்ளிக் கூட ஆசிரியர் (பிரம்மராய வாத்தியார்) கூற்றாக வெளிப்படுத்துகிறார்.

2. இங்கிலாந்து நாட்டில் பெண்கள் வாக்குச்சீட்டு உரிமையை வாங்குதல், வேதவல்லி அம்மையார் மூலம் கூறப்படுகிறது.

3. தென்னாப்பிரிக்காவில் இந்தியர்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகளை 1896இல் கல்கத்தாவில் கூடிய 12ஆம் ஜன சபைக் கூட்டத்தில் செய்யப்பட்ட தீர்மானமொன்றை ஆதரித்துப் பேசுகையில் ஜி.பரமேசுவரன் பிள்ளை கூறியது, புதுச்சேரியில் தங்கம்மா பாரதி மூலம் கூறப்படுகிறது.

4. மான்செஸ்டர் கார்டியன் என்ற பத்திரிகை நவீன ருஷ்யாவின் விவாக விதிகளைப் பற்றிய உண்மையான விவரங்களைப் பிரசுரம் செய்ததைப் பாரதி சுட்டிக்காட்டுகிறார்.

5. சியூசின் என்ற சீனத்துப் பெண்ணைப் பற்றி ஏஷியாடிக் ரெவ்யூ (Asiatic Review) பத்திரிகையில் வெளிவந்த செய்திகள், தங்கம்மா பாரதியால் பெண்கள் கூட்டத்தில் கூறப்படுகின்றன.

இவ்வாறு பத்திரிகைகளின் மூலம் பிறநாட்டுப் பெண்களின் நிலையை நம் நாட்டுப் பெண்களுக்கு அறிவிக்கிறார் பாரதியார்.

நவீன பெண்ணிய வாதிகள் 'பெண்ணியம் என்பது பெண்களால் பேசப்பட வேண்டும்' என்று கூறுவதைப் பாரதி அன்றே உணர்ந்திருக்க வேண்டும். அதனால் தான், தான் கூறவந்த கருத்துகளைப் பெண்கள் வாயிலாகவே பல இடங்களில் வெளிப்படுத்துகிறார். குறிப்பாக வேத வல்லியார் மூலமாகவும், மங்களம்மாள் மூலமாகவும், அன்னிபெஸண்ட் அவர்களின் கூற்றாகவும், தங்கம்மாள் பாரதி மூலமாகவும் வெளிப்படுத்துவதைக் காணலாம்.

## பிறமதத்துப் பெண்கள்

பிறநாட்டுப் பெண்களைப் போலத் தமிழ்நாட்டு மாதர் விழிப்படைய வேண்டும் என்று கருதிய பாரதி பிற மதத்துப் பெண்களைப் போல் தமிழ்நாட்டு மாதர்களும் நடத்தப்பட வேண்டும் என்பதில் அக்கறை கொண்டிருந்தார். குறிப்பாக, பௌத்த

மதத்தில் பெண்கள் நடத்தப்படும் விதத்தில் பாரதி மிகுந்த ஈடுபாடு உடையவராய் இருக்கின்றார். புத்தமதத்தில் பெண்கள் நடத்தப்படும் விதம் குறித்த பாரதியின் கருத்துகளைப் பின்வருமாறு பட்டியலிடலாம்.

1. புத்தருடைய மார்க்கத்திலே ஞான சம்பாதனத்தில் பெண்களுக்கும், ஆண்களுக்கும் சிறிதேனும் வேற்றுமை பாராட்டுவது கிடையாது.

2. பவுத்த வசனங்களிலே தேடித்தேடிப் பார்த்தாலும் புருஷர்களைக் காட்டிலும் பெண்களைக் குறைவாகச் சொல்லியிருப்பதில்லை.

3. பெண்களுக்கும் ஆண்களுக்கும் புத்தர் விதித்திருப்பதன் நன்மைகள் பவுத்த மார்க்கம் பரவும் தேசங்களில் நன்கு காணப்படுகின்றன.

4. மனைவியையும் மகளையும் அகதிகள் போல் அடைத்து வைப்பது கிடையாது.

5. சந்தோஷ காலங்களிலும், உற்சவகாலத்திலும், அந்தப் பெண்கள் வெகு சுயாதீனத்துடன் இருக்கிறார்கள்.

6. குடும்பத்திலே அவர்கள் நிலை சுதந்திரமானது.

7. தமக்குத் தாமே சம்பாத்தியம் செய்துகொள்கிறார்கள்.

8. தமது தந்தையார், கணவர் என்போரின் காரியாதிகளை மேற்கொள்கின்றனர்.

9. ஆண் குழந்தைகளுக்கும் பெண் குழந்தைகளுக்கும் பலவந்தமாக விவாகம் செய்துவைக்கும் வழக்கம் அந்நாட்டிலில்லை.

10. இளைஞர்களும் கன்னியர்களும் காதலிருந்தால் மட்டுமே விவாகம் செய்துகொள்வார்கள்.

11. குருக்களேனும், சோதிடரேனும், தாய் தந்தையரேனும் விவாகத்தில் தலையிடுவதில்லை.

12. மோதிரம் மாற்றிக் கொள்ளுதல், தாலிகட்டிக் கொள்ளுதல் முதலிய எந்தவித சின்னங்களும் கிடையாது. ஒரு பெண்ணின் பெயரைக் கேட்ட மாத்திரத்திலேயே, அவளைப்பார்த்த மாத்திரத்திலேயே அவளுக்குத் திருமணம் ஆயிற்றா இல்லையா என அறிந்துகொள்ள இயலாது.

மேற்கண்டவை, பாரதி சக்ரவர்த்தினி பத்திரிகையில் எழுதிய கட்டுரையொன்றில் காணப்படுகின்றன. இந்த நிலையையே பாரதி தமிழ்நாட்டுப் பெண்களிடம் கொண்டுவர விரும்பினார்.

## பெண்கள் கடைப்பிடிக்க வேண்டியன

பெண்களின் சமத்துவத்தைப் பற்றிப்பேசும் பாரதியார் அவர்கள் சாத்வீகமான முறையில் சமத்துவம் அடைய வேண்டும் என்பதையே விரும்புகிறார்.

ஆண்மக்களைப் பெண்கள் ஆயுதங்களால் எதிர்க்க முடியாது என்பதை உணர்ந்த பாரதியார் சாத்வீக எதிர்ப்பினால் அவர்களுக்கு நல்ல புத்தி வரவேண்டுமென்று கூறுகிறார் (பா.க., ப. 172).

பெண்கள் ஆண்களுடன் சில உடன்பாடுகளை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். ஆண்கள் பெண்களைச் சமத்துவமாக நடத்தினாலன்றி அவர்களுடன் சேர்ந்து வாழக் கூடாது. அப்படி வாழ்கின்றபோது ஆண்கள் கோபித்தால் அவர்களுக்கு விதிக்கின்ற தண்டனைகளை எல்லாம் இறைவனை நம்பிப் பொறுத்துக்கொள்ள வேண்டும். இப்படிக்கூறும் பாரதி, பெண்கள் இந்தச் சாத்வீக எதிர்ப்பு முறையைப் பின்பற்ற வேண்டுமானால் அவர்கள் தங்கள் கணவனிடம் சொல்லவேண்டியது என்னென்ன என்பதையும் குறிப்பிடுகிறார்.

> **"நான் எல்லா வகையிலும் உனக்குச் சமமாக வாழ்வதில் உனக்குச் சம்மதம் உண்டானால் உன்னுடன் வாழ்வேன். இல்லாவிட்டால் இன்று இராத்திரி சமையல் செய்யமாட்டேன். எனக்குவேண்டியதைப் பண்ணித் தின்று கொண்டிருப்பேன். உனக்குச் சோறு போடமாட்டேன். நீ அடித்து வெளியே தள்ளினால் ரெஸ்தாவில் கிடந்து சாவேன். இந்த வீடு என்னுடையது. இதை விட்டு வெளியேறவும் மாட்டேன்" (பா.க., ப.173).**

## பாரதியும் பெண்ணியமும்

பாரதியின் மேற்கண்ட கருத்துகளைத் தொகுத்து நோக்கி அவரை மிதவாதப் பெண்ணியவாதி என்று கூற வாய்ப்பிருக்கிறது.

> **"ஆண்களுக்கு இணையாக, பெண்கள் வளரமுடியாமல் போனதற்குக் கல்வியறிவின்மையும் விழிப்**

**புணர்வின்மையும் காரணமாகின்றன. இதை மையப் படுத்திப் பேசப்பட்ட பெண்ணியம் தான் முதல் அலைப் பெண்ணியம்" (பெண்ணிய குரலதிர்வும் தலித் பெண்ணிய உடல் மொழியும், ப.5)**

என்பர்.

இவ்வகையில் நோக்கும்போது பாரதியை முதல் அலைப் பெண்ணிய வாதியாகவும் கருதலாம்.

"சகலதளங்களிலும் ஆணுக்குள்ள அனைத்து உரிமைகளும் பெண்ணுக்குத் தேவை" என்பதை வலியுறுத்துவதே பெண்ணியம் என்பார் தேவதத்தா. 'பெண் விடுதலை பெறாமல் தீண்டப்படாதோர் விடுதலை சாத்தியமில்லை' என்பார் அம்பேத்கர். 'பாட்டாளி வர்க்கத்தின் விடுதலை என்பது, பெண் முழு விடுதலை பெறாமல் சாத்தியமில்லை' என்பார் அறிஞர் லெனின் (மேலது, ப.2). இவர்கள் கருத்துகளோடு, ஒப்பு நோக்கத்தக்க வகையில் பாரதியின் கட்டுரைகள் அமைந்துள்ளதை மேலே காண்போம்.

மேலும், ஒரு பெண் தெய்வமான சக்தியைத் தனது தெய்வமாகக் கொண்டவர்; இதற்கென, சக்திதாசன், காளிதாசன் என்று தனது புனைபெயரை வைத்துக்கொண்டவர்; தனது குருவாக நிவேதிதா தேவி என்ற பெண்மணியை ஏற்றுக் கொண்டவர்.

தனது முதல் நூலான, 'ஸ்வதேச கீதங்கள்' (1908) கவிதைத் தொகுப்பைத் தான் குருவாகக் கொண்ட நிவேதிதா தேவிக்குச் சமர்ப்பணம் செய்துள்ளார். அதனைத் தொடர்ந்து வெளிவந்த 'ஜென்ம பூமி' (1909) (இது 'ஸ்வதேச கீதங்கள்' தொகுப்பின் இரண்டாம் பாகம்) என்ற நூலையும் நிவேதிதாவிற்கே சமர்ப்பித்துள்ளார். அதனைத் தொடர்ந்து வெளிவந்த 'ஞானரதம்' (1910) நூலில்,

**ஓம்**
**"ஸ்ரீமதி நிவேதிதா தேவிக்கு**
**ஸமர்ப்பணம் செய்யப்பட்டது"**
**(பாரதி காலமும் கருத்தும், ப.11)**

என்று எழுதியுள்ளார்.

மேலும், பெண்களுக்கென்றே நடத்தப்பட்ட 'சக்ரவர்த்தினி' இதழின் ஆசிரியராய் இருந்து பல பெண்ணிய கட்டுரைகள் எழுதியிருக்கிறார்.

இவ்வாறு பெண்ணைத் தனது தெய்வமாகத் தனது குருவாகக் கொண்ட பாரதியைச் சிறந்த பெண்ணியவாதி என்றே

கூறலாம். பெண்கள் முன்னேற்றம் குறித்த உலகளவிலான சிந்தனைகளைத் தொகுக்க முற்படுவோர் பாரதியை விடுக்க இயலாது. பெண்கள் முன்னேற்றம் குறித்த உலகச் சிந்தனையாளர்களின் வரிசையில் பாரதி முன்னணியில் நிற்கிறார் என்று கூறுவதே பொருத்தமுடையதாகும்.

பாரதியின் கட்டுரைகளின் வழிப் பாரதியின் பெண்ணியச் சிந்தனைகளைக் கீழ்க்காணுமாறு தொகுத்துரைக்கலாம்.

1. பாரதி காலத்திற்குச் சற்று முன்னும் பின்னும் பெண்கள் முன்னேற்றம் குறித்துச் சில இலக்கியவாதிகள் சிந்தித்துள்ளனர். பாரதியின் பெண்ணியச் சிந்தனைகள் அவர்களின் சிந்தனைகளிலிருந்து தனித்து, சிறப்புற்று, செல்வாக்குப்பெற்று விளங்குகின்றன.
2. ஒரு நாட்டின் விடுதலை என்பது அந்நாட்டில் உள்ள சமூகத்தின் விடுதலையைப் பொறுத்தே அமைகிறது. சமூகத்தின் விடுதலை அச்சமூகப் பெண்களின் விடுதலையைப் பொறுத்தே அமைகின்றது என்ற கருத்து பாரதியின் கட்டுரைகளின் வழிப் புலப்படுகின்றது.
3. பெண்கள் அடிமைகளாய் இருப்பதற்குக் காரணம் அவர்களிடம் உள்ள கல்வி யறிவின்மையே என்பதை உணர்ந்த பாரதி பெண்கல்வியின் தேவைகளைப் பற்றித் தம் கட்டுரைகளில் மிகுதியாகப் பேசியுள்ளார்.
4. விதவைகள் மறுவாழ்வுக்காகப் பல தேசியத் தலைவர்களைவிட பாரதி மிகுதியாகச் சிந்தித்துள்ளார். இவ்விடத்தில், தானே மகாத்மா என்று போற்றிய காந்தியடிகளைக் கூட கடுமையாக விமர்சித்துள்ளார். இது காந்திய வாதிகளுக்குச் சற்றுத் தடுமாற்றத்தை ஏற்படுத்தினாலும் பாரதியின் கருத்தே நிலைபெற்று நிற்கின்றது.
5. பாரதி பிறநாட்டுப் பெண்களிடம், பிறமதத்துப் பெண்களிடம் உள்ள விடுதலை உணர்வு நம்நாட்டுப் பெண்களிடமும் வரவேண்டும் என்பதை விரும்புகிறார்.
6. பாரதியின் கட்டுரைகளின் வழி அவரது பெண்கள் முன்னேற்றக் கருத்துகளைத் தொகுத்தாராய்ந்து அவரை மிதவாதப் பெண்ணியவாதி என்று கருதலாம்.
7. பெண்ணைத் தன் குருவாக, தன் இஷ்ட தெய்வமாகக் கருதிய பாரதி உலகப் பெண்ணியவாதிகளுள் முன்னணியில் நிற்கிறார்.

# கல்விச் சிந்தனைகள்

இவ்வியலில் பாரதியின் கல்விச் சிந்தனைகள் விரிவாக ஆராயப்படுகின்றன. இதன் முற்பகுதியில் பழந்தமிழ் இலக்கியத்தில் கல்விபற்றிய சிந்தனைகள் மேலோட்டமாக நோக்கப்பட்டும் பாரதிகாலக் கல்விச் சூழல்கள் எவ்வாறு இருந்தன என்பதும் விவாதிக்கப்படுகின்றன.

பாரதி தேசியக் கல்விக்கு முதன்மை அளித்த காரணங்களை ஆராய்வதாக இவ்வியலின் மையப்பகுதி அமைகிறது.

தேசியக் கல்வியில் நடத்தப்பட வேண்டிய பாடங்கள், அதை நடத்த வேண்டிய முறைகள் பற்றிய பாரதியின் சிந்தனைகள் தொகுத்து மதிப்பீடு செய்யப்பட்டுள்ளன.

மேலும், தேசியக் கல்வியை நடைமுறைப்படுத்த பொருளாதார ரீதியாக ஏற்படும் சிக்கல்களைச் சமாளிப்பது குறித்த பாரதியின் சிந்தனைகள் இவ்வியலின் இறுதியில் அமைந்துள்ளன.

**மொழிச் சிந்தனைகள்**

பாரதி காணவிரும்பிய சமுதாயத்தில் கல்விக்கென்று தனித்த இடமுண்டு. பாப்பா வயதில் இருந்தே கல்விப்பணி தொடங்குகின்றது. ஓடி விளையாடு பாப்பா என்று தொடங்குபவர்,

> "காலை எழுந்தவுடன் படிப்பு பின்பு
> கனிவு கொடுக்கும் நல்ல பாட்டு
> மாலை முழுதும் விளையாட்டு என்று
> வழக்கப்படுத்திக் கொள்ளு பாப்பா"

என்று அக்குழந்தை எவற்றைச் செய்யவேண்டும், எவற்றைச் செய்யக்கூடாதென்பதைப் பட்டியலிட்டுக் காட்டுகிறார். கல்வியினைக் குறித்த தெளிவான கருத்தியலைக்கொண்ட பாரதி ஒரு தேர்ந்த கல்வியியல் அறிஞராக, எதிர்காலத் தேவைகளைத் தொலைநோக்காக உணர்ந்து கல்வியியல் பாடத்திட்டங்களையும் செயல் நெறிகளையும் வரைந்துள்ளார். இவற்றின்வழி அவரது கல்வியியல் புலமை வெளிப்படுகின்றது.

### பழந்தமிழ் இலக்கியங்களில் கல்விச் சிந்தனைகள்

கல்வியின் பெருமை, கல்வியின் சிறப்பு, கல்வி கற்கும் முறை, கல்வியின் பயன் இவற்றை மையப்படுத்திப் பழந்தமிழ் இலக்கியங்களிலே ஏராளமான செய்யுள்கள் உள்ளன.

> "உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்
> பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே
> பிறப்பு ஓர் அன்ன உடன்வயிற்றுள்ளும்
> சிறப்பின் பாலால் தாயும் மனம் திரியும்
> ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
> மூத்தோன் வருக என்னாது அவருள்
> அறிவுடையோன்ஆறு அரசும் செல்லும்
> வேற்றுமை தெரிந்த நாற்பால் உள்ளும்
> கீழ்ப்பால் ஒருவன் கற்பின்
> மேற்பால் ஒருவனும் அவன்கண் படுமே" (புறம் 183)

எனும் பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனின் இந்தப் புறநானூற்றுப் பாடல் அவன் காலத்து மக்களுக்குக் கல்வியின் சிறப்பை வலியுறுத்தும் பொருட்டு இயற்றப்பட்டது.

> "எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
> கண்ணென்ப வாழும் உயிர்க்கு" (குறள் 392)

எனும் குறளை உள்ளிட்ட 'கல்வி' என்னும் அதிகாரத்தில் கல்வியின் அவசியம் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

இதுபோன்றே தமிழ் இலக்கண, இலக்கிய நூல்களில் கல்விச் சிந்தனைகளை ஏராளமாகக் காணலாம். அவை அவ்வக் காலத்திற்கேற்பக் கல்வி கற்பதற்கான வழிமுறைகளை எடுத்தியம்புகின்றன.

### பாரதி காலக் கல்விச் சூழல்

ஆனால் பாரதியின் காலம் வேறு. அந்நியர் நம்மீது ஆதிக்கம் செலுத்திக்கொண்டிருக்கும்போது, அவர்களை எதிர்க்கும் முக்கியக் கருவியாகக் கல்வியைக் கருதுகிறார். ஆளும் வர்க்கத்தினர் மக்களைச் சுரண்டித் தங்கள் ஆதிக்கச் சிந்தனைகளைப் பரப்பவே மதம், சாதி, கல்வி ஆகியவற்றைப் பயன்படுத்தியுள்ளதை வரலாறு நமக்கு உணர்த்துகிறது. முதல் இந்தியச் சுதந்திரப் போருக்குப் பிறகு கிழக்கிந்தியக் கம்பெனியிலிருந்து நிர்வாகப் பொறுப்பு விக்டோரியா மகாராணியின் நேரடி ஆட்சிக்குக் கீழ் கொண்டுவரப்பட்டது.

அதிகார பலத்தைக் கொண்டு இந்தியாவை நீண்டகாலம் ஆட்சி செய்ய இயலாது என நம்பிய ஆங்கில ஏகாதிபத்திய அரசு மெக்காலேயின் கல்வித் திட்டத்தைத் தீவிரப்படுத்தியது. ஆங்கிலக் கல்வியைப் பயில்பவர்கள் சமூக அந்தஸ்தைப் பெற்று வாழ்க்கையை மேற்கொள்வது போன்ற ஒரு போலித்தனமான எண்ணம் உருவாக்கப்பட்டது. இதன் பின்விளைவுகளை உணர இயலாத பொதுமக்கள் இந்த மாய வலையில் சிக்கினர். மெக்காலேயின் ஆங்கிலக் கல்வியைக் கற்ற இந்திய வர்க்கத்தினரைக் கொண்ட ஆங்கில அரசு தனது ஆதிக்கத்தை நிலைநிறுத்தியது. தங்களது சுயநலனுக்காக இந்திய மக்களின் சிந்தனை வளர்ச்சிக்குச் சிறிதும் உதவிபுரியாத பிறருடைய கால்களை வருடி வாழ்க்கை நடத்த உதவும் கல்வியைப் போதித்து, அறிவுச் சுரண்டலுக்கு வழி வகுத்தது. அதில் வெற்றியும் கண்டது.

ஆளும் வர்க்கத்தினர் தேவையை அறிந்து அதற்கேற்ற கல்விக் கொள்கையைத் தாமஸ் பாரங்டன் மெக்காலே, இங்கிலாந்துப் பாராளுமன்றத்தில், இரத்தத்திலும் தோல் நிறத்திலும் இந்தியர்களாக இருப்பினும், ஆங்கில, மேல்நாட்டுக் கல்வித் திட்டத்தால் அறிவிலும், எண்ணங்களிலும், கருத்துக்களிலும் நடை, உடை, பாவனைகளிலும், நீதி அறிவதிலும் ஆங்கில உணர்வுள்ள இனம் இந்தியாவில் ஏற்படும்; இந்த இனம் ஆங்கிலேயர்களுக்கு உதவத் தேவைப்படும் எனத் தொலைநோக்குப்பார்வையுடன் உரையாற்றினார். மெக்காலேயின் அப்பார்வை ஆங்கிலேயர்களுக்கு வெற்றியைத் தேடித்தந்தது. பாரதி, ஆங்கிலேயர்களின் இப்படிப்பட்ட அரசியல் தந்திரங்களை முறியடிப்பதற்கோர் மாற்று சக்தியாகத்தான் 'தேசியக் கல்வி'யை முன்வைக்கிறார்.

**தேசியக் கல்வி**

தேசியக்கல்வி என்பது என்ன? அதில் என்னென்ன பாடத்திட்டங்கள் இருக்கவேண்டும்? அதனை எப்படி நடத்த வேண்டும்? அதனை நடத்துவதற்குத் தகுதியானவர்கள் யார்? அவர்கள் எந்த மொழியில் நடத்த வேண்டும்? நாடு முழுவதும் அக்கல்வி முறையைக் கொண்டுவர எவ்வளவு தொகை செலவாகும்? அத்தொகையை எப்படிப் பெறுவது? என்பன போன்ற பல திட்டங்களைத் தன் கட்டுரைகள் வாயிலாகத் தெளிவு படுத்தியுள்ளார்.

உலகத்து மனிதர்கள் அனைவரும் விடுதலை பெற வேண்டுமாயின், அதற்கு இந்திய தேசத்தின் விடுதலை

இன்றியமையாத மூலாதாரம் என்பதை உணர்ந்த பாரதி, பாரத தேசம் விடுதலையடைய வேண்டுமாயின் அதற்கு தேசியக் கல்வியே ஆதாரம் என்கிறார் (பா.க. ப.409).

தேசியக் கல்வியின் முக்கியக்கூறு, மக்களுக்குக் கற்பிக்கும் கல்வி அவர்களுக்கு எளிதில் புரிய வேண்டும். அவ்வாறு அவர்களுக்குக் கல்வி எளிதில் புரிய வேண்டுமாயின் அவர்களுக்குத் தெரிந்த மொழியில் கல்வி கற்பிக்கப்படவேண்டும். உதாரணமாகத் தமிழ்நாட்டில் தேசியக் கல்வி நடைபெற வேண்டுமென்றால் பாடங்கள் அனைத்தும் தமிழிலேயே நடத்தப்படவேண்டும். அவ்வாறல்லாமல் தமிழை முக்கியமென்று கருதாமல் ஆங்கிலத்தை முக்கிய மொழியாகவும் அதற்குத் துணை மொழியாகத் தமிழையும் கொண்டு பாடம் கற்பித்தால் அது தேசியக் கல்வி ஆகாது. தேசியம் என்ற சொல்லுக்கே விரோதமாய் இருக்கும் என்று கருதுகிறார் (பா.க., ப.381).

தேசியக் கல்வியில் என்னென்ன பாடங்கள் நடத்தப்பட வேண்டும் என்று பாரதி ஒரு பட்டியல் தருகிறார். இதை ஊன்றிக் கவனிக்கும் போது பாரதியின் தொலைநோக்குச் சிந்தனையை நாம் உணரலாம். முதலில் சரித்திரப் பாடங்களுக்கு முக்கியத்துவம் அளிக்கிறார். நம் நாட்டு வீர சரித்திரங்கள் தமிழரின் முதுகெலும்பை நிமிரச் செய்யும் என்று கருதியிருப்பார் போலும். தமிழர் தம் கடந்தகால வரலாற்றை உணரும் போது மட்டுமே தாம் இன்று எந்த நிலையில் இருக்கிறோம் என்பதை உணர்ந்து கொள்ள முடியும். கடந்தகாலம் ஒன்றே எதிர்காலத்தை எதிர்கொள்ளும் உந்து சக்தியாக இருக்க முடியும்.

சிங்கத்தின் கூட்டத்திலிருந்து வழி தவறிப் பிரிந்து வந்த சிங்கக் குட்டியொன்று தனிமையில் தவித்தது. அதனைக் கண்ட ஒரு ஆட்டுக் கூட்டம் அதன்மேல் இரக்கம் கொண்டு சிங்கக் குட்டிக்குப் பாலூட்டித் தம்மினத்தில் சேர்த்துக்கொண்டன. காலப்போக்கில் அந்தச் சிங்கக்குட்டியும் ஆடுகளைப் போலவே வாழ ஆரம்பித்துவிட்டது. அவற்றுடன் மேயச் செல்வது, அவற்றுடன் உண்டு உறங்குவது என அதன் வாழ்க்கை தொடர்ந்தது.

ஒருநாள் அந்தப் பகுதிக்கு வந்த ஒரு சிங்கம் ஆடுகளை வேட்டையாடத் துரத்தியது. அப்போது ஆடுகளுடன் ஒரு சிங்கக் குட்டியும் பயந்தோடுவதைக் கண்டது. உடனே சிங்கம் மற்ற ஆடுகளை விட்டுவிட்டுச் சிங்கக் குட்டியை விரட்டிப் பிடித்தது. அந்தச் சிங்கக்குட்டியை அருகிலிருந்த குளத்திற்கு

அழைத்துச்சென்று அதன் முகத்தைக் காட்டியது. தண்ணீரில் கண்ட தன் பிம்பத்தைப் பார்த்த சிங்கக் குட்டி தான் யார் என்பதை உணர்ந்து கர்ஜித்தது.

இப்படிச் சிங்கக் குட்டிகள் போல் இருந்த தமிழர்கள் ஆட்டுக்குட்டிகள் போல் அஞ்சி நடுங்கித் தாம் யார் என்பதை உணராதிருந்தனர். இவர்களைப் பாரதியார் தம்பாடல்களில் குறிப்பிட்டுள்ளார்.

“நெஞ்சு பொறுக்கு திலையே – இந்த
நிலை கெட்ட மனிதரை நினைந்துவிட்டால்
அஞ்சி யஞ்சி சாவார்–இவர்
அஞ்சாத பொருளில்லை அவனியிலே
... ... ... ...
சிப்பாயைக் கண்டு அஞ்சுவார்–ஊர்ச்
சேவகன் வருதல்கண்டு மனம்பதைப்பார்
துப்பாக்கி கொண்டொருவன்–வெகு
தூரத்தில் வரக்கண்டு வீட்டிலொளிப்பார்
அப்பாலெவனோசெல்வான் – அவன்
ஆடையைக் கண்டுபயந் தெழுந்து நிற்பார்
எப்போதும் கைக்கட்டுவார் – இவர்
யாரிடத்தும் பூனைகள்போ லேங்கிநடப்பார்”
(பா.க., ப.144)

‘பாரத ஜனங்களின் தற்கால நிலைமை’ என்ற தலைப்பின் கீழ் உள்ள பாரதியின் இந்தக் கவிதையில் அவர்காலத்தில் அந்நியரைக் கண்டு அஞ்சி நடந்த மக்களைப் படம்பிடித்துக் காட்டுகிறார். இவ்வாறு அஞ்சி நடப்பதற்குக் காரணம், அவர்கள் தங்கள் பண்டைய வரலாற்றை அறியாமையே என்பதைப் பாரதி அறிந்திருந்தார். அதனால் தான் சரித்திரப் பாடத்தை முதன்மைப்படுத்திப் பேசுகிறார்.

வேதகால சரித்திரம், புராண கால சரித்திரங்கள், பௌத்த காலச் சரித்திரம், ராஜபுதானத்தின் சரித்திரம் இவற்றை மிகுந்த சிரத்தையுடன் கற்பிக்க வேண்டுமென்கிறார். பள்ளிக்கூடம் எந்தப் பகுதியில் இருக்கிறதோ அந்தப் பகுதியின் சரித்திரத்தைச் சிறப்பாக நடத்தவேண்டும் என்கிறார்.

இந்தச் சரித்திரப் பாடங்களை ஆசிரியர்கள் மிகுந்த உற்சாகத்துடனும், ஆவேசத்துடனும், பக்தி சிரத்தையுடனும் கற்பிக்க வேண்டும் என்கிறார்.

ஆசிரியர்கள் தன்னளவில் உற்சாகத்துடன் இருந்தால்தான் அடுத்தவரை உற்சாகப்படுத்திப் பாடம் கற்பிக்க முடியும். அதனால்தான் ஆசிரியர்கள் உற்சாகத்துடன் பாடம் நடத்த வேண்டுமென்கிறார்.

ஆவேசத்துடன் நடத்தும்போது மட்டுமே அடுத்தவரை ஆவேசப்படுத்த முடியும். அவர்களின் உணர்வுகளைத் தூண்டி எழுப்ப முடியும். அவர்களைப் போராட்டத்தில் ஈடுபடுத்தமுடியும். அவர்களின் முதுகெலும்பை நிமிர்த்த முடியும். அதனால் தான் ஆசிரியர்கள் ஆவேசத்துடன் நடத்த வேண்டும் என்கிறார்.

பக்தியுடன் நடத்தவேண்டும் என்று அவர் சொன்னது இறைபக்தியை அல்ல, தேசபக்தியைத்தான் என்பது சொல்லாமலேயே விளங்கும்.

குழந்தைகளுக்கு ஆரம்பப்பாடத்திலேயே நம்முடைய சரித்திரத்தின் முக்கியமான, அற்புதமான வீரதீர வரலாற்றை விளக்க வேண்டும் என்கிறார். குறிப்பாக அசோகன், விக்ரமாதித்யன், ராமன், லஷ்மணன், தர்மபுத்திரன், அர்ஜுனன் இவர்களிடம் உள்ள சிறந்த குணங்களையும் அவற்றால் அவர்களுக்கும் அவர்களுடைய குடிகளுக்கும் ஏற்பட்ட மஹிமைகளையும், பிள்ளைகளின் மனத்தில் பதியும்படி செய்வது அந்தப் பிள்ளைகளின் இயல்பைச் சீர்திருத்தி மேம்படுத்துவதற்கு நல்ல சாதனமாகும் என்று கருதுகிறார் (பா.க. ப.354).

இப்படி இந்திய தேசியச் சரித்திரங்கள் மாத்திரமேயல்லாது விருப்பப்பட்டால் அராபிய, பாரஸீக, ஐரிஷ், போலிஷ், ருஷிய, எகிப்திய, இங்கிலீஷ், ப்ரெஞ்சு, அமெரிக்க, இத்தாலிய, கிரேக்க, ஜப்பானிய, துருக்கி தேசங்களின் சரித்திரங்களிலும் சில முக்கியக் கதைகளை விளக்கவேண்டும் என்கிறார் (மேலது)

இன்று தன்னம்பிக்கை நூல்களில் உலக வரலாற்று நாயகர்களின் வாழ்க்கைச் சரித்திரம் இல்லாத ஒரு நூலைக் கூடப் பார்த்துவிட முடியாது. மக்களுக்குத் தன்னம்பிக்கை ஏற்படுத்த ஏற்கெனவே வெற்றிபெற்றவர்களின் வரலாற்றை விளக்குவது ஒரு வழிமுறையாகும். அந்த வழிமுறையைப் பாரதி அன்றே கடைப்பிடிக்கத் தூண்டி இருக்கிறார்.

**பூகோளக் கல்வி**

'பூமி சாஸ்திரம்' என்ற பாடத்தைப் பற்றி பாரதி குறிப்பிடுவது இன்று நடைமுறையில் உள்ள புவியியல்

பாடங்களைப் பெரிதும் ஒத்துள்ளது. பல அறிஞர்கள், பல நாள் கூடித் திட்டமிட்டுத் தயாரித்த பாடத்திட்டங்களைப் பாரதி அன்றே நடைமுறைப்படுத்துவதற்கான சாத்தியங்களை விளக்கியுள்ளார் என்பது வியப்பிற்குரியது. இந்தப் பாடத்திட்டங்களை ஆரம்ப வகுப்பு முதல் இறுதி வகுப்பு வரை எப்படி நடத்த வேண்டும் என அற்புதமாக வரையறைப் படுத்தியுள்ளார்.

ஆரம்பக்காலத்தில் பூகோளப்பாடம், பூமி பற்றியும், அண்ட சாத்திரம் பற்றியும், சூரிய மண்டலத்தையும், அதன் கிரகங்களைப் பற்றியும், நட்சத்திரங்களைப் பற்றியும் இருக்க வேண்டும். இவற்றைக் குழந்தைகள் புரிந்துகொள்ளும் வகையில் நடத்தவேண்டும்.

இந்தப் பாடங்களை நடத்துவதற்குத் துணையாகப் பூமிப் படங்கள் (Maps), கோளங்கள் (Globe), வண்ணப்படங்கள் முதலியவற்றை ஏராளமாகப் பயன்படுத்தவேண்டும். அப்போதுதான் குழந்தைகள் ஆர்வத்தோடு கற்கத் தூண்டப்படுவர். எளிதில் புரிந்துகொள்ள இது வழிவகுக்கும்.

ஐந்து கண்டங்கள், அதிலுள்ள முக்கிய நாடுகள், அந்த நாடுகளில் உள்ள மக்கள்தொகை, மதம், அரசியல்நிலை, வியாபார நிலை, அங்கே விளைகின்ற முக்கிய விளைபொருட்கள்(Crops) அங்கே நடைபெறும் கைத்தொழில்கள், இவற்றைக் குழந்தைகளுக்குத் தெளிந்த ஞானம் வரும்வரை நடத்தவேண்டும்.

மேலும், நாடுகளிலுள்ள துறைமுகங்கள், அவற்றில் நடைபெறும் வியாபாரம் குறித்த தெளிந்த விவரங்கள் ஆகியவற்றைக் கற்பிக்க வேண்டும். இந்திய மக்கள் வெளித்தேசங்களில் எங்கெங்கே அதிகமாகக் குடியேறியிருக்கிறார்கள் என்ற விஷயம் பிள்ளைகளுக்குத் தெரிவதுடன் அங்கு அவர்களின் படிப்பு, தொழில், அந்தஸ்து முதலிய அம்சங்களில் இந்தியர்கள் எந்த நிலையில் இருக்கிறார்கள் என்பதையும் மாணவர்களுக்குக் கற்பிக்க வேண்டும் என்கிறார் (பா.க., ப. 385).

இந்திய பூமி சாஸ்திரத்தைக் குழந்தைகளுக்குக் கற்பிக்கும் விதம் பற்றிய பாரதியின் சிந்தனையைக் கீழ்க்காணுமாறு தொகுத்துரைக்கலாம்.

1. இந்தியாவிலுள்ள மாகாணங்கள், அவற்றுள் அங்குள்ள மொழிகளின் வேற்றுமைக்குத் தகுந்தபடி இயற்கையைத் தழுவி ஏற்படுத்தக் கூடிய பகுதிகள் இவை விசேஷ சிரத்தையுடன் கற்பிக்கப்பட வேண்டும்.

2. மற்ற மாகாணங்களில் வசிக்கும் மக்கள், அங்கு வழங்கும் முக்கிய மொழிகள், முக்கியமான சாதிப்பிரிவுகள், தேச முழுமையும் வகுப்புகள் ஒன்று போலிருக்கும் தன்மை, மத ஒற்றுமை, பாஷைகளின் நெருக்கம், வேத புராண இதிகாசங்கள் முதலிய நூல்கள் பொதுமைப்பட வழங்குதல், இவற்றிலுள்ள புராதன ஒழுக்க ஆசாரங்களின் பொதுமை, புண்ணிய சேத்திரங்கள், அவற்றின் தற்கால நிலை, ஆகியவை கற்பிக்கப்படவேண்டும்.

3. இந்தியாவிலுள்ள பெரிய மலைகள், நதிகள், இந்தியாவின் விளைபொருள்கள், அளவற்ற செல்வம், உணவு பேதங்கள், நாட்டின் பஞ்சம், தொற்றுநோய்கள், இவற்றின் காரணங்கள், நீர் பற்றாக் குறை, வெளி நாடுகளுக்கு மக்கள் குடியேறிப் போதல் - இந்த அம்சங்களைக் குறித்து மாணாக்கர்களுக்குத் தெளிவான ஞானம் ஏற்படுத்தப்பட வேண்டும்.

4. பாரத தேசத்தின் அற்புதமான சிற்பத்தொழில், கோயில்கள், இவற்றைப்பற்றி மாணாக்கருக்குத் தெரிவிக்க வேண்டும்.

இவற்றை நாம் கூர்ந்து நோக்கும்போது பாரதியின் தெளிவான சிந்தனைகளைப் புரிந்துகொள்ளமுடியும்.

மாணவர்களிடை இந்திய தேசம் முழுவதும் நம்முடைய சகோதரர்கள் என்கிற மனப்பாங்கை ஏற்படுத்தவே தேசம் முழுதும் வகுப்புகள் ஒன்றுபோல இருக்கும் தன்மை, மதஒற்றுமை, பாஷைகளின் நெருக்கம், வேதபுராண இதிகாசங்கள் முதலிய நூல்கள் பொதுமைப்பட வழங்குதல், புராதன ஒழுக்கங்களின் பொதுமை ஆகியவற்றை விளக்கக் கூறுகிறார். ஒன்றிணைந்த இந்திய மக்களால் மட்டுமே தம்மை அடிமைப்படுத்தியிருக்கும் அந்நியர்களின் ஆதிக்கத்தை விடுவிக்க முடியும் என்பதிலே பாரதி கொண்ட திட நம்பிக்கையே பாரதி மேற்கண்டவாறு கூறக்காரணம் எனலாம்.

### மதப்படிப்பு

தற்போது ஆரம்பக் கல்வியில் இல்லாத மதப் படிப்புப்பற்றி பாரதி கூறுவதன் முக்கியக் கூறுகளைப் பின்வருமாறு தொகுக்கலாம்:

1. தேசியப் பள்ளிக்கூடத்து மாணவர்களுக்கு ஆசிரியர்கள் தத்தம் இஷ்ட தெய்வங்களிடம் பக்தி செலுத்தி வழிபாடு செய்துவரவேண்டும் என்று கற்பிப்பதுடன், இதர தெய்வங்களைப் பழிப்பது, பகைத்தல், என்ற மூடச் செயல்களைக் கட்டோடு விடுவிக்கும்படி போதிக்க வேண்டும்.

2. கடவுள் ஒருவரே. அவரை ரிஷிகள் பல பெயர்களால் அழைக்கின்றனர் என்ற ரிக் வேத உண்மையை மாணாக்கரின் உள்ளத்தில் ஆழப்பதியுமாறு செய்யவேண்டும்.

3. ஏழைகளுக்கு உதவி புரிதல், கீழ் ஜாதியாரை உயர்த்தி விடுதல் முதலியனவே மக்கள் சமூகக் கடமைகளில் மேம்பட்டன என்பதைக் கற்பிக்க வேண்டும் (பா.க., ப.388).

மேற்கண்ட பகுதியின் மூலம் பாரதியின் பரந்த நோக்கினை நாம் உணர்ந்து கொள்ளலாம். மதப்படிப்பு மக்களுக்குக் கடவுள் நம்பிக்கையை, தெய்வபக்தியை அதிகப்படுத்துவதைக் காட்டிலும் பிற மதங்களைத் தூற்றுதல் கூடாது, அவர்களும் நம்மவர்களே என்னும் மனப்பான்மையை வளர்ப்பதற்காகவே நடத்தப்பட வேண்டும் என்பதைப் பாரதியிலிருந்து அறிந்துகொள்ளலாம்.

இவ்வாறே பாரதி, 'பொருள் நூல்', 'ராஜ்ய சூத்திரம், 'ஸயன்ஸ் அல்லது பௌதிக சாஸ்திரம்', 'கைத்தொழில்-விவசாயம்', தோட்டப்பயிற்சி, வியாபாரம், 'சரீரப் பயிற்சி', 'யாத்திரை' போன்ற பாடப் பிரிவுகளுக்கு ஏற்ற வகையில் பாடத்திட்டங்களையும், அவற்றை நடத்தும் வழிமுறைகளையும் தெளிவுபட விளக்கியுள்ளார். மேற்கண்ட பாடத்திட்டங்கள் அனைத்தும் எளிய தமிழில் நடத்தப் பெறவேண்டும் என்பது பாரதியின் எண்ணம்.

எனினும் பாரதி மற்றமொழிகளை எந்தவிதத்திலும் குறைத்து மதிப்பிடவில்லை.

இந்தப் பாடங்களைக் கொண்ட தேசியக் கல்விக்கான பள்ளிக்கூடங்களை எப்படிக் கட்டுவது, அதற்கான செயல்களை எங்ஙனம் ஈட்டுவது என்பதையும் பாரதி விளக்குகிறார்.

**பள்ளிகள் நடத்த வழிமுறைகள்**

மேற்கண்டபடி பள்ளிக்கூடங்கள் நடத்துவதற்கு மாதம் நூறுரூபாயே போதும் என்கிறார். இந்த நூறு ரூபாயை எப்படிப் பெறுவது? அரசாங்கத்திடமிருந்தா? அப்போது ஆங்கிலேயர்களின் ஆட்சியன்றோ நிலவி வந்தது. அவர்கள் தேசியக் கல்வியை அனுமதிப்பார்களா? இந்த ஐயங்களுக்கும் பாரதியே விடை கூறுகிறார்.

ஒரு கிராமத்தில் பள்ளிக்கூடம் நடத்த வேண்டும் என்றால் அந்தக் கிராமத்து மக்களிடம் சந்தா வசூலித்துப் பணம் சேர்க்கவேண்டும். அதில் அனைத்துத் தரப்பு மக்களும் ஒரே தொகையைச் சந்தாவாகச் செலுத்த வேண்டிய அவசியம் இல்லை.

செல்வர்கள் அதிகத் தொகையையும் மற்றவர்கள் அவர்களால் இயன்ற அளவு சிறு தொகைகளையும் கொடுக்கலாம் என்கிறார். அப்படி நூறு ரூபாய் வசூலிக்க முடியாத கிராமங்களில் ஐம்பது ரூபாய் வசூலித்து அதில் மூன்று ஆசிரியர்களைப் பணிக்கமர்த்தலாம். அவர்களுக்கு மாதம் பன்னிரண்டு ரூபாய் சம்பளம் கொடுக்கலாம். மீதமுள்ள தொகையில் பூகோளக் கருவிகள், அறிவியல் கருவிகள், விவசாயக் கருவிகள் முதலியவற்றை வாங்கிக் கொள்ளலாம். நூறு ரூபாய் வசூலாகிற கிராமங்களில் ஆசிரியர் மூவருக்கும் தலா இருபது ரூபாய் சன்மானம் வழங்கலாம். மீதமுள்ள நாற்பது ரூபாயில் மேற்படி கருவிகள் வாங்கிக் கொள்ளலாம். இப்படிப் பாரதியின் கனவுகள் நீண்டுகொண்டே போகின்றன.

இவை எல்லாவற்றிற்கும் மேலாகக் 'கல்வி கற்பிப்பதில் பிள்ளைகளிடம் அரையணாக் கூடச் சம்பளம் வசூலிக்கக் கூடாது' என்கிறார். இந்தக் கூற்றைத் தற்கால நிலையோடு ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும்.

மேலும், மிகவும் ஏழைகளான பிள்ளைகளுக்குப் பள்ளிக் கூடத்திலேயே இயன்றவரை புத்தகங்களும், உடைகளும், உணவும் கொடுக்கவேண்டும் என்கிறார்.

இப்படிக் கூறுவதன் மூலம் 'பாரதி கல்விச் சிந்தனையாளர்களின் வரிசையில் ஈடு இணையற்று விளங்குவதை நாம் உணரலாம்.

இந்தக் கல்வியைக் கற்பதிலும், கற்பிப்பதிலும் பெண்களுக்கு ஓர் இடத்தையும் வகுத்திருக்கிறார்.

இந்துக்களல்லாத பிள்ளைகள் இப்பாட சாலைகளில் சேர்ந்தால் அவரவர் மதக் கொள்கைகளை அன்னியமத தூஷணையின்றிப் பெருந்தன்மையாகக் கற்றுக்கொடுப்பதற்குரிய வழிகளை மேற்கொள்ளவும் வழி சொல்கிறார். இப்படிக் கூறுவதனால் தன்னைச் சராசரி மனிதன் என்ற தளத்திலிருந்து உயர்த்திக்கொண்டு நிற்கிறார்.

# மொழிச் சிந்தனைகள்

ஒரு மனிதனின் உயிர் போன்றது அவனது மொழி. உயிரில்லாத உடல் பயனற்றது போன்றதே மொழியில்லாத மனிதனின் வாழ்க்கை. தாய் மொழிவழிச் சிந்தனையே ஒரு மனிதனை உயர்த்தவும், மனித சமுதாயத்தை மேம்படுத்தவும் வழிவகுக்கும். தம்மொழி விடுத்துப் பிறமொழிகளை நாடும் தன்மை, தம்மையே அழித்துக்கொள்வதற்குச் சமமாகும். இதனை நன்குணர்ந்ததால்தான் பாரதி, நம்நாட்டு மக்கட்கு 'மொழிப்பற்று' வேண்டும் என்று வலியுறுத்துகிறார். "நாடும் மொழியும் தமதிரு கண்கள்" என்று பாடுபட்ட பாரதி, தமிழ் மொழியின் உயரிய தன்மை கண்டதால் பிறமொழிகளைவிடத் தமிழே சிறந்த மொழி என்று திட நம்பிக்கை கொண்டிருந்தார்.

"யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல்
இனிதாவ தெங்கும் காணோம்" (பா.க. ப.159)

என்று அவர் பாடுவதன் வழித் தமிழ் மொழிக்கு அவர் கொடுத்திருந்த உயரிய இடத்தினை அறியலாம். தமிழ் மொழியின் மேல் அவர் பற்றுக்கொண்டிருந்தாலும் பிறமொழிகளை அவர் குறைத்து மதிப்பிட்டதில்லை. 'மலையாளம்' என்ற தலைப்பில் அவர் எழுதியன இரண்டு கட்டுரைகள். 'நம்பூதிரிகளும் தீயரும்', 'மலையாளத்துக் கதை' ஆகிய அந்தக் கட்டுரைகளில் மலையாள நாகரிகத்தைப் பற்றி மிக விரிவாக எழுதியுள்ளார்.

'ஜப்பானிய கவிதை' எனும் தலைப்பில் அவர் எழுதிய கட்டுரையில் அம்மொழிக்கவிதை பற்றிச் சிலாகித்துச் சொல்லுகிறார். ஆங்கில மொழி இலக்கியங்கள் மேல் அவருக்கிருந்த ஈடுபாடு அனைவரும் அறிந்ததே. வடமொழியின் மேல் அவர் கொண்டிருந்த பற்றினைக் கொண்டு, அவரை வடமொழிச் சார்பாளர் என்று சொல்வாரும் உண்டு.

"ஆதி சிவன் பெற்றுவிட்டான்–என்னை
ஆரிய மைந்தன் அகத்திய னென்றோர்
வேதியன் கண்டு மகிழ்ந்தே – நிறை
மேவும் இலக்கணஞ் செய்து கொடுத்தான்" (ப.157)

எனும் மேற்கண்ட பாடல் வரிகள் 'தமிழ்த்தாய்' என்னும் தலைப்பில் அவர் எழுதிய கவிதையிலுள்ளவை. தமிழ் மொழியின் முதல் இலக்கண நூலை ஓர் ஆரியன் செய்தான் என்று பாரதி

குறிப்பிடுவதால் அவரை ஆரியச் சார்பாளர் என்று கருதிவிடமுடியாது. மேலும்,

> **"தமிழ் நாட்டிலே தமிழ் சிறந்திடுக. பாரத தேச முழுவதிலும் எப்போதும் போலவே வடமொழி வாழ்க. இன்னும் நாம் பாரத தேசத்தின் ஐக்யத்தைப் பரிபூரணமாகச் செய்யுமாறு நாடு முழுவதிலும் வடமொழிப் பயிற்சி மேன்மேலும் ஓங்குக. எனினும், தமிழ் நாட்டில் தமிழ்மொழி தலைமைபெற்றுத் தழைத்திடுக" (பா.கு., ப.382).**

என்று கூறுவதைக் கொண்டு அவரை வடமொழிச் சார்பாளர் என்று சொல்லிவிட முடியாது.

மேற்கண்ட வாசகத்தை உற்று நோக்கினால் உண்மை புரியும். முன்னை இயல்களில் கூறியதை மீண்டும் இங்கே நினைவுபடுத்திக்கொள்ளுதல் அவசியம். பாரதி, சாதி என்ற அடிப்படையில் தாழ்த்தப்பட்ட மக்களையும் உயர்சாதிப் பிராமணர்களைப் போல் பூணூல் அணிந்து, விபூதிப்பட்டை போட்டுக்கொள்ளச் செய்கிறார். இந்துக்கள் அனைவரும் ஒரே சாதி எனக் கொண்டுவரும் எண்ணத்தில் தான் இத்தகைய முயற்சிகளை மேற்கொண்டார்.

அந்நிய ஆட்சிக்கு எதிராக மக்களை ஒன்றுதிரட்டும் முயற்சியில் ஈடுபட்ட பாரதி இந்தியாவில் பெரும்பான்மை மக்களின் மதமாக விளங்கிய இந்துமதத்திற்குள் அனைவரையும் கொண்டுவர முயன்றார். முஸ்லீம்களும் இந்துக்களே என்றார். இந்த அடிப்படையில் தான் வடமொழி பற்றிய கருத்துகளையும் நாம் இனங்காண வேண்டும். தமிழ்மொழி தமிழ்நாட்டைத்தவிர அதன் அண்டை மாநிலங்கள் சிலவற்றில் தாக்கத்தை ஏற்படுத்தியிருக்கிறதே தவிர நாடு முழுவதும் அதன் தாக்கம் சிறிதளவே இருந்தது. ஆனால் வடமொழி நாட்டில் உள்ள அனைத்து மாநிலங்களிலும் ஊடுருவி நின்றது. இதன் காரணமாகத்தான் பரவலாக இருந்த வடமொழியை நாடெங்கும் மேன்மேலும் சிறந்தோங்குக என்கிறார். பல்வேறு மொழிகளையும் அவற்றின் பெருமைகளையும் நன்கு அறிந்திருக்கும் ஒருவரால் மட்டுமே அவற்றுள் உயர்வுடையது எது? என்பதையும் ஆணித்தரமாகக் கூறமுடியும். பாரதி,

> **"சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே, அதைத்**
> **தொழுது படித்திடடி பாப்பா"**

என்று கூறுவதன் மூலம் 'தமக்குத் தெரிந்த மொழிகளில்- உயர்வுடையது;சிறந்த சொற்களை உடையது தமிழே' என்பதைப் புலப்படுத்துகின்றார்.

ஒவ்வொருவரும் தம் தாய்மொழியின் மீது உயர் பற்றுவைத்து அதன் மேன்மைக்காகப் போராடவேண்டும். தற்காலநிலை எவ்வாறுள்ளது? ஆங்கிலத்தில் பேசுவதும் எழுதுவதும் கௌரவம் என்று இன்றைய இளைஞர்களும் அவர்களைப் பெற்றோரும் நினைக்கின்றனர். ஒருவரை ஒருவர் சந்திக்கும் பொழுது ஆங்கிலத்திலேயே உரையாடுகின்றனர். இல்லத்தில் கூட மம்மி, டாடி, மாம்ஸ், பிரண்டு என்று சாதாரணமாகத் தமிழ்ச் சொற்களைப் போன்று ஆங்கிலச் சொற்களைப் பேசுகின்றனர். நடை, உடை, பாவனைகள் அனைத்துமே மேலை நாட்டினைப் போன்று அமைந்து வருகின்றன. பாரதியின் காலத்தில் மேல்தட்டு மக்களிடம் மட்டுமே இருந்த இந்நிலை இன்று நாடுமுழுவதும் பரவலாகிவிட்டது.

எழுத்துக்களிலும் கூட மொழிச்சீர்மை கெட்டுவிட்டது. புதுக்கவிதைகள் என்றமையும் இக்கால இலக்கியங்களிலும், திரைப்படப்பாடல்களிலும் சிறுகதைகள் மற்றும் புதினங்களிலும் வழக்குச் சொற்களின் பெயரில் ஆங்கிலச் சொற்களே ஆதிக்கம் செலுத்தி வருகின்றன. இப்படிப்பட்ட நிலை தமிழ் மொழிக்கு ஏற்பட்டுவிடும் என்பதை அறிந்துதானோ என்னவோ பாரதி நாட்டுப் பற்றோடு மொழிப்பற்றையும் இணைத்தே ஊட்டினார். அவர் கால மக்கள் தம் மொழிகளைக் கையாண்ட நிலையினைப் பாரதி நினைக்கிறார்.

அவர்காலத் தமிழர்கள் தமிழைக் காட்டிலும் ஆங்கிலத்தின் மேல் மோகம் கொண்டிருந்தனர். அவர் காலத்தில் கல்விக் கூடங்களில் சரித்திரப் பாடங்களை ஆங்கிலத்தில் கற்றுக்கொடுப்பது வழக்கமாயிருந்தது. அதனை மாற்றித் தமிழ் மொழியில் கற்பிக்கலாம் என்று நினைத்தாலும் அதனைத் தமிழர்களே எதிர்க்கும் நிலை. இதனைப் பாரதியார் 'தமிழ்' என்ற கட்டுரையில் குறிப்பிடுகிறார். திருநெல்வேலிப் பண்டிதர் ஒருவரின் வரிகளை பாரதி மேற்கோளாகக் காட்டி அவருக்கு மறுப்பும் எழுதுகிறார்.

> "பாஷைத் தொல்லை பெருந்தொல்லையாகவே இருக்கிறது. ஆனால் எனது ஜில்லா, எனது காலேஜ் சம்பந்தப்பட்ட வரையிலே பிள்ளைகளுக்குச் சரித்திரப் பாடம் இங்கிலீஷிலே கற்றுக்கொடுப்பதைக் காட்டிலும் தேச பாஷையில் கற்றுக்கொடுப்பது அதிக பயன்படுமென்று சொல்வதற்கில்லை. எனது மாணாக்கர்களிலே பெரும்பாலோர் இங்கிலீஷ் இலக்கணப் பிழைகளும் வழக்குப் பிழைகளும் நிறையச் செய்த போதிலும் மொத்தத்திலே தமிழைக்

காட்டிலும் இங்கிலீஷை நன்றாக எழுதுகிறார்கள். சரித்திர விஷயங்களை வியஹரிக்கும்போது எனக்கும் இங்கிலீஷ்தான் தமிழைக் காட்டிலும் நன்றாகச் சொல்ல வருகிறது" (பாரதி தமிழ், ப.164)

என்று நீலகண்டையர் சொன்னதற்குப் பாரதி பின்வருமாறு எழுதுகிறார்.

"ஸ்ரீ நீலகண்டையரின் நிலைமையை நினைத்து நான் மிகவும் வருத்தப்படுகிறேன். சொந்த பாஷையை நேரே பேசத் தெரியாதவர்கள் சாஸ்திர பாடங்கள் நடத்தும் விநோதத்தை இந்தத் தேசத்திலேதான் பார்த்தோம். புதுமை! புதுமை !! புதுமை!!" (மேலது, ப.165).

மேலும் தான் நன்கு அறிந்த மொழிகளுள் தமிழைப் போல் வலிமையும், திறமையும், உள்ளத்தொடர்பும் உடைய மொழி வேறில்லை என்பதைப் பல இடங்களில் வலியுறுத்துகிறார்.

"மிகவும் விரைவிலே தமிழின் ஒளி உலக முழுவதும் பரவாவிட்டால் என் பெயரை மாற்றி அழையுங்கள். அதுவரையில் இங்கு பண்டிதர்களாக இருப்போர் தமக்குத் தமிழ்ச்சொல் நேரே வராவிட்டால் வாயை மூடிக்கொண்டு வெறுமே இருக்க வேண்டும். தமிழைப் பிறர் இழிவாகக் கருதும்படியான வார்த்தைகள் சொல்லாதிருக்கவேண்டும்" (மேலது, ப.166).

என்று அவர் கூறுவதிலிருந்து அவரது ஆழ்ந்த தமிழ்ப் பற்றினையும், தமிழின் எதிர்காலம் குறித்த தீர்க்கதரிசனத்தையும் உணரலாம். பாரதியின் இந்த தீர்க்கதரிசனம் மெல்லத் தழைத்தோங்குவதை வரலாறு உணர்த்தும். பாரதி நெல்லையப்பருக்கு எழுதிய கடிதம் ஒன்றில் இப்படிக் குறிப்பிடுகிறார்.

"தம்பி-நான் ஏது செய்வேனடா: தமிழை விட மற்றொரு பாஷை சுகமாக இருப்பதைப் பார்க்கும்போது எனக்கு வருத்தமுண்டாகிறது. தமிழனைவிட மற்றொரு ஜாதியான் அறிவிலும், வலிமையிலும் உயர்ந்திருப்பது எனக்கு ஸம்மதமில்லை. தமிழச்சியைக் காட்டிலும் மற்றொரு ஜாதிக்காரி அழகாயிருப்பதைக் கண்டால் என் மனம் புண்படுகிறது." (பாரதி தமிழ், ப.120)

காலச் சூழல்களுக் கேற்ப மொழியும் பலவற்றைத் தம்முள் பெறுதல் தேவையாகின்றது. எனவேதான் பாரதியும் பிறநாட்டு நல்லறிஞர்கள்

எழுதியவை நம் மொழியிலும், நம்நாட்டு உயரிய கருத்துகள் பிறமொழியிலும் பெயர்க்கப்படவேண்டும் என்கிறார். ஒவ்வொரு மனிதனும் தான் பணத்தால் உயர வேண்டும் என்று நினைக்கிறானே தவிர மொழியையும் உயர்த்த வேண்டும் என்று நினைப்பதில்லை. தமிழ் மொழி என்பது இன்றைக்கு வசதியில் உயர்ந்தவர்களால் புறக்கணிக்கப்பட்டு வருகின்றது. இந்நிலை முற்றிலும் மாற வேண்டும் எனில் தமிழை உயர்த்தித் தமிழன் உயரவேண்டும். உயர்ந்த தமிழன் தம் மொழியையும் உயர்த்த வேண்டும் என்ற பாரதியின் வழி நடக்க வேண்டும்.

இவ்வியலில் காணப்படும் பாரதியின் கல்விச் சிந்தனைகளைக் கீழ்க்காணுமாறு தொகுத்துரைக்கலாம்.

1. பழங்காலத்தில் வெளிநாட்டினரின் ஆதிக்கம் இல்லை. பழந்தமிழ் இலக்கியத்தில் மக்கள் கல்வி கற்க வேண்டிய அவசியத்தை வலியுறுத்தும் பாடல்கள் உள்ளனவே தவிர அவற்றை நடைமுறைப்படுத்தும் வழிகள் பற்றிய பாடல்கள் இல்லை. ஆனால் பாரதி காலத்தில் இந்திய தேசம் முழுமையும் அந்நிய ஆதிக்கத்தின் பிடியில் இருந்தது. மக்கள் அடிமைப்பட்டுக் கிடப்பதற்கான காரணங்களுள் ஒன்று கல்வியறிவு இன்மையே என்பதை உணர்ந்த பாரதி அடிமைத்தளையை உடைப்பதற்கான கருவியாகக் கல்வியைக் கருதினார்.

2. கல்வி மக்களைச் சென்றடைய வேண்டுமானால் அவர்களின் தாய்மொழியில் நடத்துதலே சிறந்தது என்று பாரதியின் கட்டுரைவாயிலாக அறியலாம்.

3. மக்களுக்கு விடுதலை உணர்வு ஊட்ட வேண்டுமானால், மக்கள் தம் பழம்பெருமையை அறியவேண்டும். அதன் மூலம் அவர்களது தற்போதைய நிலைமையை உணரவேண்டும். இதன் பொருட்டே பாரதி சரித்திரப் பாடத்திற்கு முக்கியத்துவம் கொடுத்துப் பேசுகிறார்.

4. தற்போது ஆரம்பக் கல்வியில் இல்லாத மதப்படிப்பு பாரதியின் தேசியக் கல்வியில் வலியுறுத்தப்பட்டுள்ளது. சாதி, மத பேதமின்றி மக்கள் வாழவே மதப்படிப்பைப் பாரதி வலியுறுத்துகின்றார்.

5. மக்கள் அனைவருக்கும் கல்வி கற்பிப்பதில் ஏற்படும் பொருளாதாரச் சிக்கல்களை நீக்குவதற்குப் பாரதியின் கருத்துகளைப் போல் அவர் சமகாலத்தினர் எவரும் கருத்துரைக்கவில்லை.

# தொழில்துறைச் சிந்தனைகள்

இவ்வியல் பாரதியின் தொழில்துறைச் சிந்தனைகளை எடுத்துரைக்கும் விதமாக அமைந்துள்ளது.

பாரதி காலத்தில் நிலவிய பஞ்சம், கடுமையான வரி விதிப்பு, பொருளாதார ஏற்றத் தாழ்வுகள் இவற்றிற்கு மாற்றுவழியாகத் தொழில்துறை மேம்பாடு ஒன்றையே கருதுவர். அதன் பின்னணிகள் இவ்வியலில் விரிவாக ஆராயப்படுகின்றன.

கைத்தொழிலின் சிறப்பினையும், அதனை வளர்க்கும் முறைகளையும் பற்றிப் பாரதி கூறிய கருத்துகள் இவ்வியலில் குறிப்பிடப்பட்டுள்ளன.

மேலும் இந்தியா தொழில்துறையால் மேம்படுவதற்கு ஜப்பான் முதலிய நாடுகளுக்குச் சென்றுவரவேண்டும் என்று பாரதி கூறுவதன் காரணங்கள் இவ்வியலின் பிற்பகுதியில் ஆராய்ப்பட்டுள்ளன.

**"கைத்தொழில் வளர்ச்சிக்காக உழைப்போரும்**
**உண்மையான தேசபக்தரேயாவர்"**

*(பாரதி தமிழ், ப.145)*

என்று குறிப்பிடும் பாரதி தம் படைப்புகளில் ஏராளமான இடங்களில் தம் தொழில்துறைச் சிந்தனைகளை வெளிப்படுத்தியிருக்கிறார்.

பாரதியின் தொழில்துறைச் சிந்தனைக்கான வித்தினை அவரது 'புதிய ஆத்தி சூடி'யிலேயே,

**"கைத்தொழில் போற்று"**

என்றும்,

**"கூடித் தொழில் செய்" (பா.க. ப.239)**

என்றும் பாடுவதால் அறியலாம்.

அவர்காலத்தில் 'பஞ்சம்' மிகுந்திருந்தது. எனினும் பஞ்சத்தைக் காட்டிக்கொள்ளாமல் தமிழ்நாட்டின் செழிப்பை மட்டும் தம் பாடல்களில் பதிவு செய்திருக்கிறார்.

"காவிரி தென்பெண்ணை பாலாறு–தமிழ்
கண்டதோர் வையை பொருநைநதி–யென
மேவிய யாறு பலவோடத் – திரு
மேனி செழித்த தமிழ்நாடு" (பா.க. ப.156)

என்று தமிழகத்தின் செழிப்பினை அவர் பெருமைக்காகப் பாடியிருந்தாலும் அவர் காலத்தில் பஞ்சத்தால் மாண்டவர்கள் ஏராளம்.

உள்நாட்டுத் தொழிலும் அவர்காலத்தில் சிறப்பாக நடைபெறவில்லை. ஆங்கில ஏகாதிபத்தியம் உள்நாட்டுத் தொழிலுக்கு அநியாயமான முறையில் வரிவிதிப்பைச் செய்திருந்தது. இங்கிலாந்திலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட பொருட்களை இந்தியாவில் விற்றுவிடவேண்டும் என்ற அவாவினால் நம்நாட்டிற்கு அவர்கள் மிக அதிகமான முறையில் வரிவிதித்தனர். இதனைப் பாரதியாரே தம் கட்டுரைகளில் பதிவு செய்திருக்கிறார்.

> "குனிந்தால் வரி, நிமிர்ந்தால் வரி, நின்றால் வரி, உட்கார்ந்தால் வரி, நிலவரி, நீர்வரி, பாசிவரி, ரோட்டுவரி, காட்டுவரி, வீட்டுவரி, மோட்டுவரி, கொடுக்கல்வரி, வாங்கல்வரி, வருமானவரி, தொழில்வரி, தோல்கேட்டுவரி, ரயில்வரி, சாக்கடை வரி, சாராயக்கடை வரி, மாட்டுவரி, ஆட்டுவரி, நாய்வரி, பூனை வரி, இறக்குமதி வரி, ஏற்றுமதி வரி இன்னும் எண்ண முடியாத வரிகளைப் போட்டு, வீடு, வாசல், நிலம், கூரை, ஆடு, மாடு, சட்டி, பொட்டி இவைகளை ஜப்தி செய்து ஏலங்கூறிக் கொள்ளையடித்துப் போகும் சர்க்கார்ப் பணத்தை நாம் ஏன் திரும்பக் கொள்ளையடிக்கப்படாது என்று எண்ணிக் கொள்ளையடிக்கிறான்" (பாரதியார் கட்டுரைகள், ப.140).

மேற்கண்ட கூற்று அவர் காலத்தில் நிலவிய கடுமையான வரிவிதிப்பைப் படம்பிடித்துக் காட்டும். இந்த வரிவிதிப்பு ஒரு செழிப்பான சூழலில் இருந்திருந்தால் பரவாயில்லை. பஞ்சத்தால் அவதியுற்ற காலத்தில் இத்தகைய வரிவிதிப்பு மக்களுக்கு எவ்வளவு துயரத்தை ஏற்படுத்தியிருக்கும் என்பதை உணருதல் வேண்டும்.

குடியானவனாயிருந்து பயிர்த்தொழில் செய்யப் பல தடங்கல்கள் இருந்தன. பருவமழை உரிய காலத்தில் பெய்யவில்லை. அப்படியே மழை பெய்தாலும், உழ எருதுகள் இல்லை; உழுதாலும் விதைக்க வித்துக்களில்லை; விதை விதைத்தாலும் களைகளைச்

சரியான காலத்தில் எடுத்துப் பயிர் அடித்துக் காவல்காத்து மகசூலை அறுவடை செய்து வீடு கொண்டுவந்துசேர்க்க வழியில்லாமல் இருந்தது. அப்படியே வீடு கொண்டுவந்து சேர்த்தாலும் அதன் பலனை அனுபவிக்கவும் வழியில்லாமல் இருந்தது. ஏனெனில் ஆங்கிலேய அரசின் தீர்வைக்கே தானியங்களை விற்றுவிட வேண்டிய கட்டாயம் அவர்களுக்கு இருந்தது. ஆங்கில அரசு அத்தானியங்களை அடிமாட்டு விலைக்கே வாங்கியது. ஆகையால் உழவுத் தொழிலைவிட்டு வேறு தொழில் தொடங்க நினைத்தாலும் அங்கும் இந்த வரி விதிப்பு வந்து தடைவிதிக்கும். இந்தச் சூழலில் மனம் தளர்வுற்ற மக்களுக்குத்தான் பாரதி தொழிலியற் சிந்தனைகளைக் கூறி ஊக்கமளித்திருக்கிறார்.

ஒவ்வொருவரும் ஒன்றுக்கு மேற்பட்ட தொழில்களில் வல்லவர்களாக இருக்கவேண்டும். 'குலத்தொழில் கல்லாமல் பாகம்படும்'. எனவே பிறதொழில்களிலும் கவனம் செலுத்தி, அவற்றையும் கொஞ்சமாவது தெரிந்து வைத்திருத்தல் வேண்டும் என்பது பாரதியின் விருப்பம். அவர் காலத்தில் சாஸ்திரிகள் புரோகிதம் பண்ணுவதைத் தவிர வேறு ஒன்றும் கற்றுக்கொள்ளாதவர்களாக இருந்தனர். அவர்களைக் கேலிசெய்யும் விதத்தில் அமைந்ததே 'சாஸ்திரியார் மகன்' என்னும் சிறுகதை. 'தனது விளையாட்டு வண்டி ஒடிந்துபோக அதனால் அழுது கொண்டிருந்த சிறுவனை அங்குவந்த சிப்பாய் ஏன் அழுகிறாய் என்று கேட்க, 'வண்டி ஒடிஞ்சிபோச்சி' என்றவனிடம் வீட்டிற்குப் போனால் உன்னுடைய தகப்பனார் சரிசெய்து கொடுத்துவிடுவார் என்று கூறிய சிப்பாயிடம்,

> "எங்கப்பா சாஸ்திரியார். அவராகவே வண்டிய நேர்படுத்திக் கொடுக்க முடியாது. அவருக்கு ஒரு தொழிலும் தெரியாது. யார் வீட்டிலாவது அரிசி கொடுத்தால் வாங்கிக் கொண்டு வருவார். வேறே ஒரு இழவுந் தெரியாது" (பாரதியார் கட்டுரைகள், பக்.183-184)

என்று கூறும் சிறுவனின் வாயிலாகப் பெரியவர்கள் பலவற்றை அறிந்தவர்களாக இருக்கவேண்டும் என்பதைப் புலப்படுத்துகின்றார். சிறுவனின் மனக்குமுறலாக இது வெளிப்படுவதால், தனது தந்தையைப் போல இவனும் வெறும் புரோகிதம் மட்டும் செய்யாமல், இல்லங்களில் தரும் அரிசியினை மட்டும் ஏற்காமல், உழைத்துப் பலகலைகளையும் பயின்று முன்னேறவேண்டும் என்ற தன் கருத்தையும் குறிப்பால் உணர்த்துகிறார் பாரதி.

"தொழில்" என்ற தலைப்பில் அவர் எழுதிய கட்டுரை ஒன்றில் தொழிலின் உயர்வைப் பற்றிப் பல புகழ்பெற்ற உலக அறிஞர்கள் கூறியுள்ளவற்றை மொழிபெயர்த்துத் தருவதோடு அவற்றிற்குத் தன் விளக்கங்களையும் அளித்துள்ளார். எப்படியாவது மக்கள் தங்கள் சோம்பலிலிருந்து விடுபட்டுத் தொழில் செய்து நாட்டை உயர்த்தவேண்டும் என்பதே அவருடைய விருப்பம். இவ்விடத்தில், பாரதி எடுத்தாண்டுள்ள பல்வேறு அறிஞர்கள் தொழில் பற்றிக் கூறியுள்ள மேற்கோள்கள் சிலவற்றை மேலோட்டமாகப் பார்த்துவிட்டுத் தொடர்வது பாரதியின் சிந்தனையைப் புரிந்துகொள்ள வழிவகுக்கும்.

மனுதர்ம சாஸ்திரத்திலிருந்து அவர் சொல்லும் மேற்கோள்:

**"தொழிலாளியின் கை தொழில் செய்யும் போது பரிசுத்தமாகிறது"**

***(பாரதியும் சமூகமும், ப.168)***

தோல்ஸ்தோய் என்ற ருஷிய ஞானி:

**தொழில் எத்தனை அசுசியாக இருந்தாலும், அதைச் செய்வதில் அவமானமில்லை. சோம்பலொன்றுதான் அவமானம்.**

உத்தம ஸுக்தம் என்ற பௌத்த நூல் சொல்லுகிறது:

**சோம்பல் ஒரு குற்றம். தொழிலின்றி வாழ்தல் மலம்.**

இப்படியே பாரதி, சீ-பிங் என்ற சீன ஞானியின் கருத்தையும், (நபி) ஸுலேமன் என்ற யூத ஞானியின் கருத்தையும், தோரோ என்ற அமெரிக்க ஆசிரியர், கார்லைல் என்ற ஆங்கிலேய ஆசிரியர், மோந்தாஞ் என்ற ப்ரான்ஸ் தேசத்துப் பண்டிதர் ஆகியோர்களது கருத்துகளையும் மேற்கோள்களாக எடுத்தாண்டுள்ளார்.

இப்படிப் பல தேசத்து அறிஞர்களிடமிருந்தும், பல நூல்களிலிருந்தும் 'தொழில்' பற்றிய சிந்தனைகளைத் துருவி எடுத்ததற்கான காரணங்கள் ஆய்விற்குரியன.

ஏற்கெனவே கண்டதுபோல், கடுமையான பஞ்சம், அதனை விஞ்சும் கடுமையான வரிவிதிப்பு, பொருளாதாரத்தில் ஏற்றமும் நிறைவுமின்றி வறுமையுற்ற நாடாக இந்தியா இருந்தகாலத்தில் மக்கள் வறுமை நீங்கத் தொழில்துறையைப் பெருக்குவதே ஏற்ற உபாயமாகக் கண்டவர் பாரதியார்.

பாரதி தொழில்பற்றியும், தொழிலாளர் பற்றியும் சிந்தித்துக் கொண்டிருந்த காலக்கட்டத்தில் தான் ஐரோப்பிய நாடுகளில் தொழில் துறையில் மாற்றங்கள் ஏற்பட்டுக்கொண்டிருந்தன. குறிப்பாக இங்கிலாந்து, ருஷ்யா, பிரான்ஸ் ஆகிய நாடுகளில் ஏற்பட்ட புரட்சிகளின் விளைவாக உலக நாடுகள் அனைத்திலும் 'தொழிலாளிகளின் நலன்' குறித்த சிந்தனைகள் எழுச்சிபெறத் தொடங்கின. இத்தகைய சிந்தனைகள் இந்திய நாட்டிலும் ஏற்பட்டு அதன் விளைவாகத் தொழிலாளிகள் மேம்பாடு அடையமாட்டார்களா என்ற ஏக்கம் பாரதிக்கு இருந்தது.

'தொழிலாளர்கள் என்போர் உடலினால் உழைத்து வேலை செய்பவர்கள் மட்டுமே' என்ற கூற்றை மறுக்கும் பாரதியார்,

> **"குமாஸ்தாக்கள், உபாத்தியாயர்கள் முதலியவர்களும் தொழிலாளிகளே என்று அந்த வ்யாஸமெழுதியவர் சொல்லுகிறார். எனவே, என் போன்ற நூலாசிரியர்களும் தொழிலாளிகளே"** *(பா.க., ப.78)*

என்கிறார்.

கைத்தொழில் பற்றிய பாரதியின் சிந்தனைகள் நோக்கத்தக்கன.

கைத்தொழிலாலே செல்வம் விளைகிறது. அறிவுத் தொழிலால் அது சேகரிக்கப்படுகிறது. கைத்தொழில் செல்வத்தை ஏற்படுத்துகிறது. அறிவுத்தொழில் கைத்தொழிலை நடத்துகிறது என்பதிலெல்லாம் பாரதி திடமான நம்பிக்கை கொண்டவராக இருந்ததை அவரது கட்டுரைகள் உணர்த்துகின்றன.

ஆதி காலம் முதல் ஆதிக்க வர்க்கத்தினர் கைத்தொழிலாளர்களுக்குக் கல்வி ஏற்படாத வகைக்கு வேலை செய்து வந்திருப்பதாகக் குறிப்பிடும் அவர்,

> **"எழுத்துத் தெரிந்த சூத்திரனை மிகவும் தொலைவில் விலக்கிவிட வேண்டும்"** *(பா.க. ப.75)*

என்னும் மனுஸ்ம்ருதியில் காணப்படும் மேற்கோளை எடுத்தாள்கிறார். இந்நிலை இந்திய நாட்டில் மட்டுமன்றி உலகில் உள்ள அனைத்து நாடுகளிலும் இருப்பதாகக் கூறுகிறார்.

ஆனால் இத்தகைய சூழ்ச்சிகளை மீறி எல்லா நாடுகளிலும், குறிப்பாக நமது இந்திய நாட்டிலும் கைத்தொழில் புரிவோர் பலர் கல்வியில் தேர்ச்சியடைந்திருக்கிறார்கள் என்பதில் மகிழ்ச்சிகொள்ளும் பாரதி அங்ஙனம் தேர்ச்சி படைத்தவர்கள் பலர்

தத்தம் பரம்பரைத் தொழில்களில் இறங்காமல் இலக்கியப் பயிற்சியில் வாழ்வைக் கழிப்பதை எண்ணி வருந்துகிறார் (மேலது, ப75).

இதனால் கல்வி என்பது வெறும் இலக்கண இலக்கியங்களோடு நின்றுவிடாமலிருக்கத் 'தொழில்கல்வி' என்ற ஒரு பாடத்தை அவர் தேசியக் கல்வியில் ஒன்றாகக் கருதுகிறார். இப்படித் தொழிற்கல்வியைக் கற்பதன் மூலம் கைத்தொழிலாளிகள் கல்விப்பயனைக் காவியங்கள் இயற்றுவதிலும், படிப்பதிலும் மாத்திரம் செலவிடும் வழக்கம் மாறிப்போய், அவரவர் தத்தமக்கு உரிய தொழில்களிலும் கல்வியறிவைப்பயன்படுத்தத் தொடங்குவார்கள் என்கிறார் (மேலது, ப76).

தொழிற்சங்கங்கள் பற்றிய பாரதியின் கருத்து நோக்கத்தக்கது. அவர் காலத்தில் சில தொழிலாளிகள் சம்பள ஏற்றத்துக்கும், வேலை நேரத்தைக் குறைப்பதற்குமே தங்கள் சங்கங்கள் மூலம் முயன்று வந்தார்கள். ஆனால் இதனையும் மீறி, தொழிற்சங்கத்தினர் ஆங்காங்கே பள்ளிக்கூடங்கள் ஆயிரக்கணக்காக ஏற்படுத்தி, அவற்றில் தம்முடைய மக்களுக்கு நிறைந்த கல்வியூட்டுவதற்குரிய முயற்சிகள் செய்யவேண்டும் என்றும் பகற்பள்ளிக்கூடங்கள் மாத்திரமேயன்றி இரவுப்பள்ளிக்கூடங்களும் ஏற்படுத்தி அவற்றில் தொழிலாளிகள் மற்றும் எல்லா வயதினரும் சென்று படிப்பதற்குரிய நடவடிக்கை எடுக்கவேண்டும் என்றும் வேண்டுகிறார் (மேலது, ப76). இதனால் தான்,

> **"காவியங்கள் எழுதுவதற்கு மாத்திரம் படிக்காமல் பலவகை வியாபாரங்களும், தொழில்களும் வேண்டிய படிப்புகள் படித்து, அவற்றை ஊக்கத்துடன் கையாள்வோருக்கு மேன்மேலும் செல்வம் பெருகும். ஆதலால், தொழிலாளிகளே, கல்விப்பயிற்சி செய்யுங்கள். உங்களுக்கும் உங்கள் மக்களுக்கும் கல்வியறிவு மிகுவதற்குள்ள வழி செய்யுங்கள்" (மேலது, ப.77)**

என்று கூறுகிறார்.

> **"சென்றிடுவீர் எட்டுத் திக்கும் – கலைச்**
> **செல்வங்கள் யாவுங் கொணர்ந் திங்கு சேர்ப்பீர்"**
> **(பாரதியார் கவிதைகள், ப.159)**

என்று பாரதி சொன்னது பல தேசங்களிலிருந்து கலை, இலக்கியங்களைக் கொண்டுவருவதற்காக மட்டுமன்று. நாம் செல்லுகின்ற தேசத்தில் உள்ள உயர்ந்த பண்புகளையும், அங்கே

சிறப்புற்று விளங்குகின்ற நல்ல தொழில்களையும் நம் நாட்டிற்குக் கொண்டுவரவேண்டும் என்ற நோக்கமும் இதில் உள்ளடங்கி இருக்கிறது.

இந்தியநாடு அன்றும் இன்றும் ஐரோப்பிய நாடுகளைவிடத் தொழில்துறையில் பின்தங்கியே உள்ளது. பாரதி காலத்திலிருந்து ஜப்பான் நாடு பலவித தொழிலில் மேம்பட்டு இருந்தது. ஜப்பானியர்கள் பல நாடுகளுக்குச் சென்று அங்குள்ள தொழில்களைக் கற்றுவந்து அவற்றின் நுணுக்கங்களை அறிந்து தமது முயற்சியால் அதில் புதுமைகள் செய்து கற்றுக்கொடுத்தவர்களை விஞ்சும் ஆற்றலுடையவர்கள். அவர்களிடமிருந்து தொழில் கற்றுவந்தால் நம் நாடு தொழில் துறையில் வெகுவிரைவில் முன்னேறும் என்பது பாரதியின் எண்ணம். இதனால் புத்தகங்களாலும், பத்திரிகைகளினாலும், யாத்திரைகளினாலும் இந்தியர்கள் ஜப்பான் விஷயங்களை நன்றாகத் தெரிந்துகொள்ளவேண்டும் என்று வற்புறுத்துகிறார் (பாரதி தமிழ், ப.141). அத்தோடு மட்டும் நில்லாமல் கூடிய வரை பிள்ளைகளை ஜப்பானுக்கு அனுப்பிப் பல விதமான தொழில்களும் கற்றுக் கொண்டுவரும்படி செய்யவேண்டும் என்றும் கூறுகிறார்.

> **"தொழிற் கல்வியிலும் லௌகிக சாஸ்திரப் பயிற்சியிலும் நாம் மற்ற ஜாதியாருக்கு ஸமானமாக முயலுதல் அவசரத்திலும் அவசரம்" (மேலது).**

என்று அவர் கூறுவதிலிருந்து நம் அடிமைத்தளைகளை அறுக்கவும், வறுமையை ஒழிக்கவும் தொழில்துறை முன்னேற்றம் ஒன்றே ஏற்ற உபாயம் என்று கருதலாம்.

'ஜப்பான் தொழிற் கல்வி' என்ற கட்டுரையில் தஞ்சாவூர் ஜில்லாவிலிருந்து ஒரு தமிழ் வாலிபர் சில வருடங்களாக ஜப்பானில் போய் நூல் நூற்றல், துணி நெய்தல், சாயமேற்றல் முதலிய தொழில்கள் படித்துக்கொண்டிருக்கிறார். அவர் தன் அண்ணனுக்கு எழுதும் கடிதம் வாயிலாகத் தொழிலை எப்படிக் கற்கவேண்டும், அதை எப்படி நடைமுறைப்படுத்த வேண்டும் போன்ற சிந்தனைகளைப் பதிவு செய்கிறார். அந்தக் கட்டுரையின் இறுதியில், அக்காலத்துச் சுதந்திரப் போராட்ட வீரர்கள் கைத்தொழிலுக்காக என்ன என்ன செய்ய வேண்டும் என்பதைப் பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

> **"அவர்கள் ஒரு சார்பையே கவனித்துக் கொண்டிருக்கிறார்கள். முதலாவது ஆஹாரத்திற்கு வழி தேட வேண்டும். அதிகாரம் வேண்டுமென்று**

கேட்கிறார்கள். நியாயந்தான். அது கிடைக்கும்வரை பிழைத்திருக்க வேண்டுமே? உண்டாலன்றோ உயிரோடிருக்கலாம்? படிப்பு, கைத்தொழில் இவற்றை காங்கிரஸ் சபையோர் போதுமானபடி கவனிப்பதாகத் தோன்றவில்லை. நமது ஜனங்களிலே பெரும்பாலோர் ஏழ்மையிலும் அறியாமையிலும் மூழ்கிக்கிடப்பதைக் கல்வியாளர் சும்மா பார்த்துக்கொண்டு ஒன்றும் செய்யாமலிருப்பது மடமையிலும் மடமை. கைத்தொழில் வளர்ச்சிக்காக உழைப்போரும் உண்மையான தேசபக்தரே யாவர்" (மேலது, ப.145).

பாரதியின் தொழில்துறைச் சிந்தனைகள் இன்றைக்கும் நம்நாட்டினர் மட்டுமல்லாது அனைத்து நாட்டினரும் பின்பற்றவேண்டிய சிந்தனைகளாகும். நாட்டு முன்னேற்றம் விரும்புகின்ற ஒவ்வொருவரும் தொழில்துறையில் முன்னேற்றத்தை விரும்புதலே பாரதியின் விருப்பமாகும்.

இவ்வியலில் கண்ட பாரதியின் தொழிற்துறைச் சிந்தனைகளைப் பின்வருமாறு தொகுத்துரைக்கலாம்.

1. கடுமையான பஞ்சம், அதனை விஞ்சும் கடுமையான வரிவிதிப்பு, பொருளாதாரத்தில் ஏற்றமும் நிறைவுமின்றி வறுமையுற்ற நாடாக இந்தியா இருந்தகாலத்தில் மக்கள் வறுமை நீங்கத் தொழில்துறையைப் பெருக்குவதே ஏற்ற உபாயமாகக் கண்டவர் பாரதியார்.

2. கைத்தொழில் செய்பவர்கள் கல்வியில் தேர்ச்சியடைய வேண்டும் என்று விரும்புகிறார்.

3. கல்வி கற்ற கைத்தொழிலாளர்கள் இலக்கியப் பயிற்சியில் ஈடுபட்டு வாழ்வைக் கழிக்காமல் தத்தம் பரம்பரைத் தொழிலை மேம்படுத்தும் முயற்சியில் ஈடுபட வேண்டும் என்கிறார்.

4. தொழிற் சங்கத்தினர் சம்பள ஏற்றத்திற்கும், வேலை நேரத்தைக் குறைப்பதற்குமே தங்கள் சங்கங்கள் மூலம் முயன்று வராமல் பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்தி அவற்றில் தம்முடைய மக்களுக்குக் கல்வியூட்டுவதற்குரிய முயற்சிகள் செய்யவேண்டும் என்கிறார்.

5. இந்தியர்களின் தொழில் துறை அறிவு வளர அவர்கள் வெளிநாடுகளுக்குச் சென்று தொழில்பயிற்சி கற்றுவரும்படி வேண்டுகிறார்.

6. கைத்தொழில் வளர்ச்சிக்காக உழைப்போரும் உண்மையான தேசபக்தரே என்று பாரதி கருதுகிறார்.

# குடும்பச் சிந்தனைகள்

இவ்வியல் பாரதி, சமூக நிறுவனங்களில் அடிப்படையான குடும்பம் குறித்துக் கூறிய சிந்தனைகளை எடுத்துரைக்கும் முகமாக அமைந்துள்ளது.

குடும்பத்தில் குழந்தைகளை எப்படி வளர்க்க வேண்டும்? வீட்டிலுள்ளோரின் உடல் ஆரோக்கியத்தினை எப்படி மேம்படுத்த வேண்டும்? போன்றவற்றைப் பற்றிய பாரதியின் சிந்தனைகளை இவ்வியலின் பிற்பகுதி ஆராய்கிறது.

குடும்பம் என்பது குழந்தைகளுடனோ குழந்தைகள் இல்லாமலோ அமைந்த, கணவன் மனைவி என்ற உறுதியான ஒரு பிணைப்பு; அல்லது ஓர் ஆண், ஒரு பெண் தனியாகக் குழந்தைகளுடன் கூடி வாழ்வதாகும் என்று ஓக்பர்ன் என்ற சமூகவியல் அறிஞர் விளக்குகிறார். குருதி உறவு அல்லது திருமணம் மூலம் உறவு கொண்ட மக்கள் குழுதான் குடும்பம் என்கிறார் இராபர்ட் ஹெக்டான்.

குடும்ப நிறுவனத்தில் திருமண வகைகள், குடும்ப அமைப்புகள், தந்தை ஆதிக்க / தாய் ஆதிக்கக் குடும்பம், குடும்பத்தின் வளர்நிலைகள், குடும்ப உறவுச் சிக்கல்கள் என்பன அமையும். மேலும், குடும்ப வளர்நிலைகள்,

1. திருமணத்திற்கு முந்தைய நிலை (Formative, Pre-nuptial stage)
2. மணநிலை (Nuptial Stage)
3. குழந்தை வளர்ப்பு நிலை (Child Rearing Stage)
4. முதிர்ச்சி நிலை (Maturity Stage)

எனும் நான்கு வகையாகப் பகுக்கப்படுகின்றன (கஸ்தூரி ஜான்சன், ஹெப்சிபா ஜேசுதாசன் புதினங்களில் குடும்ப நிறுவனம், ப.362). இந்நான்கு வளர்நிலைகளையும் பாரதியின் கதைகள் புலப்படுத்துகின்றன. கட்டுரைகள் இலக்கணமாகத் திகழ்கின்றன.

'குடும்பம் நடத்துவதற்கு நிலைக்களனாய் அமையும் வீடு அன்பும் அரவணைப்பும் உள்ள இடமாக இருத்தல் வேண்டும்'. 'அச்சங்கள் இல்லாமல் விடுதலைப்பட்டு வாழத்தகுந்த இடத்துக்கு வீடு என்ற பெயர் கொடுத்தனர்' என்ற பாரதி (பாரதியார் கட்டுரைகள், ப.44), இத்தன்மைகள் இல்லாதபோது வீடு நரகமாகின்றது என்பதையும் புலப்படுத்துகின்றார். ஒருவரை ஒருவர்

அடிமைப்படுத்த நினைக்கும்போதே வீட்டின் இன்பம் கெடுகிறது என்பதை,

> "வீடு துயரிடம் ஆவதற்குக் காரணம் விடுதலையும் அன்பும் இல்லாமையே. வீட்டில் அண்ணன் தம்பிகளையும் தாய்தந்தையரையும் அக்கா தங்கைகளையும் பெண்டுபிள்ளைகளையும் அடிமைப்படுத்தி ஆளச் சதிசெய்யும் ஜனங்களின் கூட்டங்களே தேசங்களையும் அடக்கி அடிமை ஆக்கி ஆளச் சதிசெய்கின்றன" (மேலது, ப.45)

என்று கூறுவதன் வழி அறியலாம்.

கல்வியும் தொழிலும் மனவிரிவையும் மன நிறைவையும் தந்து குடும்பத்தைச் செவ்வியுடையதாகச் செய்கின்றன. இதனால் குடும்பங்கள் கலைக் கோயில்களாக அமைகின்றன. இல்லறம் சிறக்க அறம் செய்தலும் இன்றியமையாததாகின்றது. அறம் ஒன்றே மெய் இன்பம் தரவல்லது என்ற கூற்றும் இதற்கு அரண்சேர்க்கும். இல்லத்தில் இருக்கும் உடன்பிறந்தோர் ஒவ்வொருவரும் தங்களுக்குள் பாசப்பிணைப்பு உடையோராக இருக்கவேண்டும், இருப்பர், என்பதை வெளிக்காட்டும் பாரதி, இவ்வுலகத்தில் பிறந்த மக்களனைவரையும் உடன்பிறந்தவர்களைப் போலக் கருதுதல் வேண்டும்; தம்பி தன் செயற்பாடுகளில் குன்றி மெலிந்து போவானேயானால் அவனை அண்ணன் அடிமை கொள்ளலாமா? கொள்ளுதல் கூடாது என்பதை,

> உடன்பிறந்தவர்களைப் போல-இவ்
> உலகினில் மனித ரெல்லாம்
> திடங்கொண்டவர் மெலிந்தோரை-இங்குத்
> தின்று பிழைத்திட லாமோ. . .
> மெலிவு கண்டாலும் குழந்தை-தன்னை
> வீழ்த்தி மிதித்திட லாமோ
> தம்பி சற்றே மெலிவானேல்-அண்ணன்
> தானடிமை கொள்ள லாமோ?
> (பாரதியார் கவிதைகள், பக்.206-207)

என்னும் பாடல்வரிகளால் தெரிவிப்பர்.

குடும்பத்தில் பிள்ளைகளைச் சிறப்போடும் தன்னம்பிக்கையோடும் நல்ல முடிவுகளை எடுக்கும் திறத்தோடும் சுறுசுறுப்போடும், ஒழுக்கத்தோடும், நல்ல பண்பாட்டோடும், உயரிய சிந்தனைகளோடும் வளர்க்கவேண்டியது பெற்றோர்களின் கடனாகும். சில குடும்பங்களில் நானா? நீயா? என்ற போட்டா போட்டி, பெற்றோர்களிடமும் நடைபெறுவதால் குழந்தைகள் பாதிக்கப்படுகின்றனர். இதனை அறிந்த பாரதி,

"இன்சொல், வெடுவெடுப்பில்லாமை, சிறிய துன்பங்களால் மனக்குழப்பம் அடைந்து விடாதிருக்கும் திறமை, மற்ற உயிர்களுக்கு இயன்றவரை துன்பமேற்படுத்தாமலிருக்க வேண்டுமென்ற ஆசை யென்பவை இருக்குமானால் எத்தனையோ (ஹிதம்) நன்மை உண்டாகக்கூடும்...தாய் தந்தையர்கள் தமது குழந்தைகளுக்கும் சிறுபிராய முதலே அவ்வித நற்குணங்கள் ஏற்படுமாறு பழக்கவேண்டும்" (சக்கரவர்த்தினி கட்டுரைகள், ப.88)

என்பது இவண் ஒப்பு நோக்கத்தக்கது.

இல்லறம், துறவறம் என்னும் இவ்விரண்டின் உண்மைத் தன்மை அறியாதோரே இல்லறம் பெரிது என்றும், துறவறமே பெரிது என்றும் பேசி, கலகத்தை உண்டுபண்ணுகின்றனர். இதற்கு விடை தருமுகமாக, இல்லறம் பெரிதா? துறவறம் பெரிதா? என்ற வினாவை எழுப்பிக் கொண்ட பாரதி இல்லறமும் துறவறமும் ஒன்றுதான் என்பதை விடையாக்குகின்றார். இதனைப் பெற, ஓர் அரசனும், ரிஷியும் கலந்துரையாடிய போது ரிஷி அரசனுக்கு விளக்குவதாக அமைக்கும் பாரதி, கன்னடத்து ராஜகுமாரி தன் சுயவரத்தின் போது சந்நியாசியின் கழுத்தில் மாலையைப்போட, அது பாம்பாகிறது. சந்நியாசியோ 'ஓம் சக்தி' - என்ற மந்திரத்தை விடாது உரைத்து மனத்தைத் தைரியப்படுத்திக் கொண்ட பிறகு அந்தப் பாம்பு மீண்டும் மாலையாகியது என்பதைக் கூறி,

"இல்லறத்தில் வாழ்ந்தால் இப்படிப்பட்ட தைரியத்துடன் வாழ வேண்டும். மணமாலையே பாம்பாக வந்து விழுந்த போதிலும் மனம் பதறக் கூடாது. தைரியம் பாம்பைக் கூட மணமாலையாக மாற்றிவிடும். இவ்விதமான தைரியத்துடன் இல்லறத்தில் நிற்பார் வீடு பெறுவர். துறவறத்துக்கும் இதுவே வழி. ஆகவே இரண்டும் ஒன்றுதான்"
(பாரதியும் சமூகமும், ப.122)

என்று விளக்குகின்றார்.

இல்லறமும் துறவறமும் பயனடிப்படையால் ஒன்றுதான். இல்லறத்தினை ஒதுக்க வேண்டும், அது பொய் என்று அனைத்து மக்களும் கூறுவது ஏற்புடையதல்ல என்பதை,

"பாரமார்த்திகம் வேறு, லௌகிகம் வேறு. ஆன்மீகத்திற்குப் பெரியோர் சொன்ன உண்மைகள் இல்லற வாழ்க்கைக்குப் பொருந்தா; எல்லாம் மாயை; எல்லாம் பொய் என்பதை இல்லறத்தான் கூறக்கூடாது. தங்க விக்ரஹம் போல பெண்டாட்டி எதிரே நிற்கிறாள்.

> அவள் பொய்யோ? நடுவீட்டில் இதை உச்சரிக்கலாமா?" (மேலது, ப.123).

என்று கேட்கிறார். இதன் மூலம் இல்லறத்தானுக்குரிய கடமைகளைச் செய்யத் தூண்டுபவர்,

> "உலகம் பொய், அது மாயை, அது பந்தம், அது துன்பம், அது விபத்து, அதை விட்டுத் தீர வேண்டும். இந்த வார்த்தைதான் எங்கே பார்த்தாலும் அடிபடுகிறது. ஒரு தேசத்திலே படித்தவர்கள், அறிவுடையோர், சாஸ்திரக்காரர், எல்லோரும் ஒரே மொத்தமாக இப்படிக் கூச்சலிட்டால், அங்கே லௌகிக காரியங்கள் வளர்ந்தேறுமா? மனம் போல வாழ்க்கையன்றோ?" (மேலது, பக். 123–124)

என மொழிகின்றார்.

இல்லறம் மேன்மையுடைது, இல்லறத்தில் வாழ்பவர்கள் அதனைப் பெரிதாகப் போற்றுதல் வேண்டும். தங்கள் உடலையும் உள்ளத்தினையும் பேணுவதுடன் தம் குழந்தைகளின் உடலினையும் உள்ளத்தையும் பேணுதல் முதற்கடன் என்பதையும் வலியுறுத்துகின்றார்.

**கவலையும் நோயும்**

உலகில் வாழும் அனைத்து உயிரினங்களுள் கவலை என்ற உயிர்க்கொல்லியைப் பெற்றவன் மனிதன் ஒருவனே. எப்பொழுதும், எதற்காகவேனும் கவலைப்பட்டுக்கொண்டிருப்பதே பலரின் தொழில் ஆகிவிட்டது. கவலையைப் போன்று மனிதனை அணு அணுவாகக் கொல்வது வேறொன்றுமில்லை. இவ்வுலகத்து மக்கள் கவலையுறுவதையும், அதன் காரணமாக உடல் நோய்கள், உளநோய்கள் பெறுவதையும் கண்ட பாரதி தம் கதைகளில் இக்கவலை குறித்தும் அதனால் வரும் உடலியல் மாற்றங்கள் குறித்தும் விரிவாக விளக்கிச் செல்லுகின்றார்.

> "அம்மம்மா! இந்த உலகத்துக் கவலைகளை நினைக்கும்போதே நெஞ்சம் பகீரென்றது. அவற்றுக்குள்ள விஷசக்தியை என்னென்பேன்? ஒருவனது முகத்திலுள்ள அழகையும், குளிர்ச்சியையும் இளமையையும் இக்கவலைகளே அழித்துவிடுகின்றன" (பாரதியார் கதைகள், ப.260)

என்று எழுதும் பகுதியில் கவலையினால் ஏற்படும் உடல்நிலை மாற்றங்களையும் அறிவில் தடுமாற்றம் ஏற்படுவதையும் சமுதாய

மக்களை அறியும்படி செய்பவர், இக்கவலைகளைப் பெறுபவளே மனம் என்கிற தாய் என்பதனை,

> "மனம் இறந்த பிறகுதான் உபசாந்தியுண்டு, அது வரையில் கவலைகள் நீங்கி இருக்கலாம் என்ற எண்ணம் வீண். கவலைகளாகிய அசுரர்களை இடைவிடாது பெற்றுத்தள்ளிக் கொண்டே இருக்கும் தாய் மனமே யாகும்" (பாரதியார் கதைகள், ப.261)

என்ற வரிகளின் மூலம் விளக்குவார். இவற்றின் வாயிலாக 'மனம்' என்ற ஒன்றே அனைத்துச் செயல்பாடுகளுக்கும் காரணம், எனவே சமுதாய மக்கள் மனத்தினைச் செம்மைப்படுத்திக்கொள்ள வேண்டும் என்பதை வலியுறுத்துகின்றார். மேலும் தம் கவிதையில்,

> "மனமே எனை நீ வாழ்வித்திடுவாய்"

என்று கேட்டவர்,

> "கவலைப் படுதலே கடுநரகு அம்மா
> கவலையற் றிருத்தலே முத்தி"

என்றும் பாடுவார்.

**சோறிடுதல்**

> "வயிற்றுக்குச் சோறிட வேண்டும் – இங்கு
> வாழும் மனிதருக் கெல்லாம்"

என்ற பாரதி, பசியினை அனுபவித்தவர். உயிர்க்கொடுமை அது ஒன்றே என்பதை நன்கு அறிந்ததினால் இதனைப் பாடலில் எழுதியவர்; உரை நடையிலும் இவ்வுலகச் செயற்பாடுகளைக் கூறி அதனை விடுத்து இதனைக் கைக்கொள்ளுங்கள் என்று கூறுகின்றார்.

பசியினால் தான் கோபம் வருகிறது. பசியடங்கினால் கோபம் அடங்குகிறது. இதைக் கருதி ஒவ்வொரு மனிதனும் தன் குழந்தைக்கு வயிறுநிறைய உணவு கொடுத்தபிறகுதான் பிற விளையாட்டுப் பொருட்களையும், பட்சணங்களையும் வாங்கிக் கொடுக்கவேண்டும் என்று வற்புறுத்துகிறார் (பாரதியார் கட்டுரைகள், ப.464).

நாகரிகம் என்ற பெயரில் உணவை உண்ணுவதை விட்டுத் கொறிக்கும் செயலைச் செய்கின்றனர். இதனால் உடலின் வளமும் மனவலிமையும் சிந்திக்கும் திறனும் அற்று விடுகின்றனர். உடல்வலிமை வேண்டும். அதனால் மட்டும் தான் மனிதன்

செயற்கரிய செயல்களைச் செய்யமுடியும். எனவேதான், திருமூலரும், திருமந்திரத்தில்,

> "உடம்பார் அழியின் உயிரார் அழிவர்
> திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவு மாட்டார்"

என்று தெரிவிப்பர். இன்று குறைவான உணவையே மக்கள் உண்ணுவதால் குறைவான வாழ்நாளை உடையவர்களாய்ப் பல்வித நோய்களுக்கு ஆட்படுகின்றனர் என்பதையும் குறிப்பிடுகின்ற பாரதி, முன்பெல்லாம் நாட்டுக் கோட்டை செட்டியார் கோயில் கட்டுவர், சத்திரங்கள் வைப்பர், பள்ளிக் கூடம் வைப்பர். ஆனால் அவர் காலத்தில் இவற்றை அநாகரிகம் என்று கருதிய சில புது நாகரிகச் செட்டிகள் காட்டு நெருப்பிலே பசு நெய்யைக் கொண்டு கொட்டுகிறார்கள். வேசைக்கும், கூத்துக்கும், வீண் விருந்துக்கும் செலவிடுவதாகக் கூறுகிறார். நாகரிகம் என்ற பெயரில் இவர்கள் செய்யும் இந்தச் செயலை விட்டுவிட்டு எல்லா மக்களுக்கும் சோறிடுதலை அவர்கள் செய்யவேண்டும் என்று பாரதி வேண்டுகிறார். இவ்வாறு அவர் கூறுவதன் மூலம், திருமூலர் சொல்லும்,

> "படமாடும் கோயில் பகவற் கொன்றீயில்
> நடமாடும் கோயில் நம்பர்க்கு அங்காகா
> நடமாடும் கோயில் நம்பர்க் கொன்றீயில்
> படமாடும் கோயில் பகவற் கதாமே"

என்னும் கருத்தினைப் புலப்படுத்துவதை யறியலாம். இதன்வழி மனிதர்களை நேசிப்பதே ஆண்டவனை நேசிப்பதற்குச் சமமாகும் என்பதையும் விளக்குகின்றார்.

### சுத்தம்

மனிதன் என்பவன் சுத்தமாக இருக்க வேண்டும். "சுத்தம் சோறு போடும்" - என்பது பழமொழி. பிற விலங்கினங்கள் கூடத் தம்மைச் சுத்தம் செய்துகொள்கின்றன. ஆறறிவு படைத்த மனிதன் தம் சோம்பேறித்தனத்தால் தம்மைச் சுற்றிக் குப்பைக் கூளங்கள் இருந்தாலும், சாக்கடையே ஓடினாலும் அதனைக் குறித்துச் சிறிது கூட மனம் சஞ்சலப்படாமல் அதனோடே வாழ்கிறான். வெளிச் சுத்தம் இல்லாதபோது உள்சுத்தம் - அகச் சுத்தம் - எவ்வாறமையும்? உள்ளும் புறமும் தூய்மையாக இருத்தலே உயர்வினை அடைய வழி என்பதை 'வண்ணான் தொழில்' என்ற கதையின் மூலம் வெளிப்படுத்த விரும்பும் பாரதி,

> **"ஹிந்துக்கள் தற்காலத்தில் குப்பைக்குள் முழுகிப் போய்க்கிடக்கிறார்கள். வீட்டையும் தெருவையும் சுத்தமாக வைத்துக்கொள்ளவில்லை. ஜலதாரைகளை**

***ஒழுங்குபடுத்த வில்லை. கிணறுகளையும், குளங்களையும், சுனைகளையும் சுத்தமாக வைத்துக் கொள்ளவில்லை. கோயிற் குளங்களில் ஜலம் புழுத்து நெளிகிறது. நாற்றம் குடலைப் பிடுங்குகிறது" (பாரதியார் கதைக்கொத்து, ப.114)***

என்பவர், சுத்தமாக வைத்துக்கொள்வது எப்படி என்பதையும் விளக்குவார்.

***"புழுதியை நீக்கித் தரையைச் சுத்தமாக்குதல் அழுக்குப்போகத் துணியையும், நாற்றமில்லாதபடி குளத்தையும், பொதுவாக எல்லா விஷயங்களையும் சுத்தமாக்கி வைத்துக்கொள்ளுதல்" (மேலது)***

போன்றவை வேண்டும் என்று கூறுகிறார்.

"நல்லதொரு குடும்பம் பல்கலைக்கழகம்" - என்று அறிஞர்கள் கூறுவதைப் போன்று குடும்பத்தினை நன்முறையில் காக்கும் பொழுதே நாடும் நலம் பெறும். அறிவுத்திறனும் உடல் வலிமையும் உடைய குழந்தைகளே நாட்டைக் காக்கும் மற்றும் உயர்த்தும் வன்மையாளர்கள். எங்கெல்லாம் சுத்தமும் சுகாதாரமும் இருக்கின்றதோ அங்கெல்லாம் நலமும் வளமும் மிளிரும் என்ற இந்தக் குறிக்கோள்களை முற்றுமாகக் குடும்பத்தில் உள்ளவர்கள் கைக்கொள்வார்களேயானால் அப்பொழுதே அவர்கள் வாழும் நாடு 'வல்லரசு' நாடாகும். இவை பாரதியின் கனவும் கற்பனையும் மட்டுமல்ல.... நம்நாட்டின் இன்றைய இன்றியமையாத் தேவைகளுமாகும்.

பாரதியின் குடும்பம் குறித்த சிந்தனைகளைக் கீழ்க்காணுமாறு பகுத்துரைக்கலாம்.

1. குடும்பத்தில் பிள்ளைகளைச் சிறப்போடும் தன்னம்பிக்கையோடும் நல்ல முடிவுகளை எடுக்கும் திறத்தோடும், சுறுசுறுப்போடும், ஒழுக்கத்தோடும், நல்ல பண்பாட்டோடும் வளர்க்க வேண்டும். அது பெற்றோர்களின் கடமை என்று பாரதி வலியுறுத்துகிறார்.

2. இல்லறம் பெரிதா துறவறம் பெரிதா என்ற வினாவிற்கு இல்லறமே பெரிது என்னும் முடிவிற்கு வருகிறார் பாரதியார்.

3. இல்லறம் மேன்மையுடையது, இல்லறத்தில் வாழ்பவர்கள் அதனைப் பெரிதாகப் போற்றுதல் வேண்டும். தங்கள் உடலையும் உள்ளத்தினையும் பேணுவதுடன் தம் குழந்தைகளின் உடலினையும் உள்ளத்தையும் பேணுதல் முதற் கடன் என்பதையும் வலியுறுத்துகின்றார்.

# துணைநூற் பட்டியல்


1. அறவாணன், க.ப., **தமிழ் இலக்கியச் சமூகவியல்**, தமிழ்க்கோட்டம், 11, மோகன் நகர், புதுச்சேரி-5, 1992.
2. இராமலிங்கம், வீ.சு., **பன்னிருவர் பார்வையில் பாரதி**, அகரம், மனை எண்-1, நிர்மலா நகர், தஞ்சாவூர்-7, முதற்பதிப்பு, 2003.
3. கண்ணதாசன் (பதி), **பாரதியார் கவிதைகள்**, பாரதி பதிப்பகம், சென்னை, 2001.
4. கைலாசபதி, க., **பாரதி ஆய்வுகள்**, பாவை பிரிண்டர்ஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, 1987.
5. சந்திரசேகரன், இரா., **மகாகவி பாரதியார் கருத்தியல் வளம்**, பாரதியார் பல்கலைக் கழகம், கோயம்புத்தூர், 2003.
6. சிற்பி, **மகாகவி பாரதி மதிப்பீடுகள்**, கோலம் வெளியீடு, பொள்ளாச்சி, 1981.
7. செயராமன், நா, கருணாகரன், கி., **பாரதி உரைநடை ஆய்வு**, பாரதியார் பல்கலைக் கழகம், கோயம்புத்தூர், 1988.
8. சுப்பிரமணியன்,ச.வே., **பாரதியார் வாழ்க்கைக் கொள்கைகள்**, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1982.
9. சுப்பிரமணிய பாரதி, சி., **பாரதியார் கவிதைகள்**, இலக்குமி நிலையம், சென்னை, 2001.
10. சுப்பிரமணிய பாரதி, சி., **பாரதியார் கட்டுரைகள்**, கவிதா பப்ளிகேஷன், சென்னை, 2003.
11. தூரன், பெ., (பதி), **பாரதி தமிழ்**, வானதி பதிப்பகம், சென்னை, 1986.
12. பஞ்சாங்கம், க., (தொகுப்பு), **மகாகவி பாரதியாரின் பெண்ணியக் கட்டுரைகள்**, பாரதி அன்பர்கள், புதுச்சேரி, 2000.
13. மணியரசன், பெ., வளவன், மா., **பாரதி ஒரு சமூகவியல் பார்வை**, கார்க்கி நூலகம், சென்னை, 1982.
14. மல்லிகா, அரங்க., **பெண்ணிய குரலதிர்வும் தலித் பெண்ணிய உடல்மொழியும்**, காவ்யா, சென்னை, 2004.
15. மலையமான். துரை.R , **சமுதாய சீர்திருத்தச் சிற்பி**, முத்துப் பதிப்பகம், விழுப்புரம், 1982.
16. ரகுநாதன், தொ.மு.சி., **பாரதி காலமும் கருத்தும்**, மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 1982.3

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை - 600 113
### அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| இலக்கிய இதழ்கள் | 110.00 |
| பண்டைத் தமிழக வரைவுகளும் குறியீடுகளும் | 80.00 |
| தமிழெனப்படுவது | 115.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் - இலக்கணம் & மொழியியல் | 105.00 |
| வலங்கை மாலையும் சான்றோர் சமூகச் செப்பேடுகளும் | 70.00 |
| தொல்லியல் நோக்கில் சங்ககாலம் | 45.00 |
| உலகத் தமிழிலக்கிய வரலாறு (தொன்மை முதல் கி.பி. 500 வரை) | 45.00 |
| உலகத் தமிழிலக்கிய வரலாறு (கி.பி.501 - கி.பி. 900) | 70.00 |
| பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் | 35.00 |
| திருமணம் செல்வக்கேசவராய முதலியார் | 30.00 |
| அருந்தமிழ் நூற்காவலர் அடிகளார் | 55.00 |
| சிவக்கவிமணி சி.கே.சுப்பிரமணிய முதலியார் | 40.00 |
| மூதறிஞர் மு. இராகவையங்கார் | 40.00 |
| ம.பொ.சி.யின் பார்வையில் தமிழ்மொழி இலக்கியம் பண்பாடு | 30.00 |
| தணிகைமணி வ.சு.செங்கல்வராயப் பிள்ளை | 50.00 |
| தட்சிணாமூர்த்தி குருமுகம்-100 | 50.00 |
| நாவலர் ந.மு.வேங்கடசாமி நாட்டார் | 50.00 |
| அருந்தமிழ் அறிஞர் அ.ச.ஞா | 50.00 |
| ஆராய்ச்சிப் பேறறிஞர் தி. வை. சதாசிவ பண்டாரத்தார் | 45.00 |
| விவிலியத் தமிழ் | 40.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள்- 3தொகுதிகள் | 260.00 |
| திராவிட மொழி இலக்கியங்கள் | 180.00 |
| நாவல்கலையியல் | 50.00 |
| சங்கரநமச்சிவாயர் | 60.00 |
| பண்டைத் தமிழ எழுத்துக்கள் | 40.00 |
| அறிவியல் தமிழ் அறிஞர் பெ.நா.அப்புசுவாமி | 60.00 |
| சங்கப் பெண்பாற் புலவர்களின் மொழியும் கருத்தும் | 30.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் - இலக்கியம் | 100.00 |
| தமிழக வரலாறு மக்களும் பண்பாடும் | 125.00 |
| தெசிணி-யின் தமிழாக்கப் பாடல் திரட்டு | 50.00 |
| தனிநாயகம் அடிகளாரின் சொற்பொழிவுகள் | 40.00 |
| தமிழ்ச் சமூகவியல் ஒரு கருத்தாடல் | 25.00 |
| தமிழ் நாட்டுப்புறவியல் ஆய்வின் வரலாறு | 50.00 |
| நாடகமும் நாடகக் கம்பெனி அனுபவங்களும் | 60.00 |
| தொல்காப்பியப் பாவியல் கோட்பாடுகள் | 40.00 |
| தமிழ்ச் சுருக்கெழுத்து நூல் | 50.00 |
| தமிழர் நாட்டு விளையாட்டுகள் | 75.00 |
| இஸ்லாமியத் தமிழ்ப் புதினங்கள் சித்திரிக்கும் அறியப்படாத வாழ்வும் பண்பாடும் | 40.00 |

**521 பாரதியின் சமுதாயச் சிந்தனைகள் 25.00**